# முன்னுரை

இச் சிறு புத்தகத்தை, ஆரம்பப் பள்ளிக்கூடத்தில் வாசிக்கும் மாணவர்களுக்கென்று எழுதினேன். அம் மாணவர்களுக்கு ஏற்றவாறு விஷயத்தையும், தமிழ் நடையையும், அமைத்து இப் புத்தகத்தை எழுதியிருக்கிறேனென்பது இதை ஒரு முறை உற்று நோக்குவார்க்கு விளங்காமற் போகாது. இதை, ஆரம்பப் பள்ளிக்கூட ஆசிரியர்கள் ஏற்றுத் தங்கள் மாணவர்களுக்கு உதவுவார்களென்று நம்புகிறேன்.

எஸ். எஸ். அருணகிரிநாதன்.

## உள்ளுறை C.B.Devaraj.







குருபக்தி

# கதாமணிமாலை

## இரண்டாம் புஸ்தகம்

---

### 1. நமது இராஜா

நமது இராஜாவின் பெயர் என்ன தெரியுமா? அவர் பெயர் ஐந்தாம் ஜார்ஜ் சக்கரவர்த்தி என்பது. அவர் இப்போது இங்கிலந்து தேசத்தில் லண்டன் பட்டணத்தில் இருக்கிறார். இங்கிலந்து தேசம் வெகு தூரத்தில், சமுத்திரத்துக்கு அப்பால், இருக்கிறது.

நமது இராஜா அவ்வளவு தூரத்தில் இருந்தாலும் அவருக்கு நம்மிடத்தில் மிகவும் பிரியம் உண்டு. அவர் மிகவும் நல்ல குணம் உள்ளவர். அவர் நமது தேசத்திற்கு இரண்டுதரம் வந்து இருக்கிறார். அவர் இந்தத் தேசத்துச் சிறுவர்கள் படிப்பதற்காக ஐம்பது லட்சம் ரூபாக்கள் கொடுத்தார். அவர் நல்லவர் அல்லவா? அவர் சிறுவராய் இருந்தபோதே மிகவும் புத்திசாலியாய் இருந்தார். அதைப்பற்றி ஒரு விஷயம் சொல்லுகிறேன் கேளுங்கள் :

நமது இராஜா சிறுவராய் இருக்கும்போது அவருக்கு ஓர் அண்ணன் இருந்தார். அவரும் மிகவும் நல்லவர். நமது இராஜாவுக்கும், அவர் அண்ணனுக்கும் ஒரு தோட்டம் உண்டு. அதில், அவர்கள் நல்ல புஷ்பச் செடிகளும், காய்கறிகளும் பயிர் செய்து வந்தார்கள்.



அவர்களுக்கு அப்போது ஒரு நல்ல பாட்டியார் இருந்தார். அந்தப் பாட்டியாரை விக்டோரியா மகாராணி என்பார்கள். அந்த அம்மாள் மிகவும் நல்லவர்கள். அவர்களைப்போன்ற ஒரு நல்ல மகாராணி எப்போதும் இருந்ததே இல்லை. அந்த அம்மாளுக்கு நமது ஐந்தாம் ஜார்ஜ் மகா இராஜா இடத்திலும், அவர் அண்ணன் இடத்திலும் அதிகப் பிரியம் உண்டு.

நமது இராஜாவும், அவருடைய அண்ணனும் தினந் தோறும் மகாராணியாரைப் பார்க்கப் போவார்கள். அப் போது நமது இராஜாவின் அண்ணன் மகாராணியாருக்குப்



பலவிதமான புஷ்பங்கள் கொண்டு போவார்; நமது இரா ஜாவோ பலவிதமான காய்கறிகளையே கொண்டு போவார்.

ஒரு நாள் விக்டோரியா மகாராணி நமது இராஜா வைப் பார்த்து, 'ஜார்ஜ்! நீ ஏன் தினமும் காய்கறிகளையே

கொண்டு வருகின்றாய்? புஷ்பங்கள் கொண்டுவர உனக்கு இஷ்டம் இல்லையோ?' என்று கேட்டார்.

அதற்கு நமது இராஜா அந்த அம்மாளைப் பார்த்து, 'பாட்டீ! புஷ்பங்கள் கொண்டுவர எனக்கும் இஷ்டந்தான். ஆனால், பசி எடுத்தால் காய்கறிகளைச் சமைத்துச் சாப்பிடலாம்; பசிக்கும்போது புஷ்பத்தை என்ன செய்கிறது? அதனால்தான் காய்கறிகளையே நான் கொண்டு வருகிறேன்' என்று சொன்னார்.

அந்தப் புத்திசாலித்தனமான வார்த்தையைக் கேட்டதும் மகாராணியார் மிகவும் சந்தோஷப்பட்டார். உடனே பலவித விளையாட்டுச் சாமான்களை அவருக்குக் கொடுத்தார். அதனால் நமது இராஜாவுக்கு அதிக ஆனந்தம் உண்டாயிற்று. அது முதல் மகாராணி நமது இராஜாவைப் 'புத்திசாலி' என்று அழைத்து வந்தார். பிள்ளைகளே! நீங்களும் நமது இராஜாவைப்போல் புத்திசாலிகளாய் இருக்கவேண்டும்!

புத்திசாலியாய் இருந்தால் பெருமை உண்டாகும்



## 2. இராவண சந்யாசி

அநேக வருஷங்களுக்கு முன்னே அயோத்தி என்னும் பட்டணத்தில் இராமர் என்று ஒருவர் இருந்தார். அவர் மிகவும் நல்லவர். அவர் ஒரு சமயம் சீதை என்னும் பெயர் உள்ள தம்முடைய பெண்சாதியோடும், இலட்சுமணன் என்னும் பெயர் உள்ள தம்பியோடும் காட்டிற்குப் போனார். காட்டில் அவர் அநேக வருஷங்கள் இருந்தார்.

ஒருநாள் சீதையின் எதிரே ஒரு மான் வந்தது! அது சீதைக்கு வேண்டியதாய் இருந்தது. அதை இராமர் பிடிக்க அதன் பின்னால் போனார்; வெகுநேரங் கழித்து இலட்சுமணனும் போனார். அதனால் சீதை தனியே இருக்க நேர்ந்தது!

அப்போது சீதை இருந்த இடத்தில் சந்யாசி வேஷத்தோடு ஒருவன் வந்தான். சீதை அவனை உண்மையான சந்யாசி என்று நினைத்து உபசாரம் செய்தார். அப்போது அந்தச் சந்யாசி சீதையைப் பார்த்து, 'சீதா! நான் உண்மையில் சந்யாசி அல்ல. நான் இலங்கா புரிக்கு இராஜா. என் பெயர் இராவணன். உன்மீது எனக்கு அதிக ஆசை உண்டு. அதனால்தான் உன் புருஷன் இல்லாதபோது உன்னை எடுத்துப்போக வந்தேன்' என்றான்.

அதைக் கேட்டதும் சீதைக்குப் பயமும், நடுக்கமும் உண்டாயின. உடனே துஷ்டனான இராவணன் சீதையை எடுத்துக்கொண்டு இலங்கைக்குப் போய்விட்டான்.

மான் பின்னால்போன இராமருக்கு இந்தச் சங்கதி தெரிந்தது. அவர் தம்முடைய தம்பியோடும், இன்னும் சிலரோடும் இலங்காபுரிக்குப் போனார். அங்கே இராமர் இராவணனை அவன் குடும்பத்துடன் கொன்றுவிட்டுச் சீதையை அழைத்துக்கொண்டு வந்தார். துஷ்டனான இராவணன் எப்படி ஆனான் பார்த்தீர்களா?

கெட்ட எண்ணம் கொண்டால் கேடுவரும்



# 3. இரண்டு மூடர்கள்

ஓர் ஊரில் இரண்டு மூடர்கள் இருந்தார்கள். அவர்கள் இரண்டு பேருக்கும் சிநேகம் உண்டு. அந்த மூடர்களில் ஒருவன் பெயர் முட்டாள்; இன்னொருவன் பெயர் மட்டி. மட்டியும், முட்டாளும் ஒரு நாள் கோவிலுக்குப் போனார்கள்.

அங்கே அநேக மனிதர்கள் சுவாமியைக் கும்பிட்டுக் கொண்டு இருந்தார்கள். மட்டியும் சுவாமியைக் கும்பிட்டான். ஆனால் முட்டாள், சுவாமியைக் கும்பிடாமல் சிரித்தான். மட்டி, 'ஏன் சிரிக்கிறாய்?' என்று முட்டாளைக் கேட்டான்.

அதற்கு முட்டாள், 'இல்லை அண்ணே! நான் சுவாமி என்றால் எப்படியோ இருக்கும் என்று நினைத்தேன். இங்கே வந்து பார்த்தால் சுவாமி கல்லாய் இருக்கிறதே! அதற்குச் சிரித்தேன்' என்றான்.

முட்டாள் என்பவன் சொன்ன வார்த்தை அங்கே இருந்த ஒரு மனிதனுக்குக் கோபத்தை உண்டாக்கிற்று. அந்த மனிதன் உடனே முட்டாள் கன்னத்தில் பளீர் என்று ஓர் அறை அறைந்து, 'முட்டாளே! சுவாமியைக் கல் என்று சொல்கின்றாய்!' என்றான்.

முட்டாள், 'அப்பாடா' என்று கன்னத்தைப் பிடித்துக்கொண்டான். இனிமேல் அங்கே இருந்தால் இன்னும் அடிவிழும் என்று மட்டி முட்டாளை அழைத்துக்கொண்டு வீட்டிற்குப் போனான். அடுத்த நாள் மட்டியும், முட்டாளும் ஒரு வீட்டிற்குச் சாப்பிடப் போனார்கள்.

சாப்பிடும்போது சாதத்தில் ஒரு கல் இருந்தது. அதைப் பார்த்த மட்டி, 'சாதத்தில் கல் இருக்கிறது' என்றான். உடனே முட்டாள் மட்டியின் கன்னத்தில் பலமாக ஓர் அறை கொடுத்து, 'மூடப்பயலே! நான் கோவிலில் அடிபட்டது உனக்குத் தெரியாதா? சாதத்தில் கல் இருக்கிறது என்று சொல்லாதே! குட்டிசாமி இருக்கிறது என்று சொல்' என்றான். அந்த வீட்டில் இருந்தவர்கள் அவன் மூடத்தனத்திற்காக அவனைப் பரிகாசம் செய்தார்கள்.

மூடர்களுக்கு எல்லாம் ஒன்றே!

## 4. நண்டுகளும் குள்ள நரியும்

ஒரு பெரிய குள்ளநரி ஒருநாள் வயலில் விசனமாகக் குந்தி இருந்தது. அதை வளையில் இருந்த ஒரு நண்டு பார்த்து, 'குள்ள நரியாரே, குள்ள நரியாரே! ஏன் நண்டுகளைப் பிடித்துத் தின்னாமல் விசனமாய் இருக்கிறீர்?' என்று கேட்டது.

அதைக்கேட்ட குள்ளநரி, 'ஐயோ, இனிமேல் நான் நண்டுகளைப் பிடித்துத் தின்னமாட்டேன். அப்படிச் செய்வது பாவம் என்று ஒரு பரதேசி எனக்குச் சொன்னார். ஆதலால் நான் இத்தனை நாள் நண்டுகளைப் பிடித்துக் கொன்றதற்கு விசனப்படுகிறேன்' என்று சொல்லிற்று.

அந்த வார்த்தையை நண்டு உண்மை என்று எண்ணிக்கொண்டது. அந்தச் சமாசாரத்தை அது மற்ற

நண்டுகளுக்கும் சொல்லிற்று. அதைக் கேட்ட நண்டுகள் சந்தோஷப் பட்டன.

அந்தப் பெரிய குள்ளநரி ஒரு நாள் நண்டுகளைப் பார்த்து, 'இன்றைக்கு நல்ல காற்று அடிக்கிறது.



வாருங்கள் வெளியே போய் உலாவி வருவோம்' என்று தந்திரமாகக் கூப்பிட்டது.

அதைக் கேட்ட நண்டுகள், 'ஆமாம். எங்களுக்கும் வெளியே போக ஆசைதான். ஆனால் வேறு குள்ளநரிகள் எங்களைப் பிடித்துக் கொண்டால் நாங்கள் என்ன செய்வோம்? அதற்குத்தான் பயப்படுகிறோம்' என்றன.

அதற்குக் குள்ளநரி, 'ஓ! அதற்காக நீங்கள் பயப்பட வேண்டாம். உங்களுக்கு அபாயம் வராமல் நான் பார்த்துக் கொள்ளுகிறேன்' என்று சொல்லிற்று.



உடனே நண்டுகள் எல்லாம் நம்பிக்கையுடன் குள்ள நரியோடு வெளியே உலாவப் போயின. குள்ளநரி நண்டுகளை மணல் தரைக்குக் கூட்டிக்கொண்டு போயிற்று. பிறகு தந்திரம் உள்ள அந்தக் குள்ளநரி, சந்தோஷமாகக் குதித்துக் கூத்து ஆடி, 'க்குவா, க்குவா' என்று ஊளையிட்டது. அடுத்த வயல்களில் இருந்த குள்ளநரிகள் இதன் குரலைக் கேட்டு அங்கு ஓடி வந்து நண்டுகளைத்

தலைக்கு ஒன்றாகப் பிடித்துத் தின்றன. பிள்ளைகளே! குள்ளநரியின் தந்திரத்தைப் பார்த்தீர்களா?

தந்திரம் உள்ளவன் வார்த்தையை, ஆலோசனை செய்யாமல், நம்பக்கூடாது.



## 5. நல்ல மகன்

தென் தேசத்தில் ஓர் ஊரில் ஒரு குடியானவன் இருந்தான். அவன் பெயர் பொன்னன். அவனுக்கு முத்து என்னும் ஒரு பிள்ளை இருந்தான். பொன்னனுக்குக் காது சுத்தமாகக் கேட்காது. துப்பாக்கி வெடித்தாலும் அவன் திரும்பிப் பார்க்கமாட்டான்.

ஒருநாள் பொன்னனும், அவன் மகன் முத்துவும் ஆற்றுக்குக் குளிக்கப் போனார்கள். ஆற்றில் படிகள் இருந்தன. முத்து, சீக்கிரம் குளித்து விட்டுக் கரையில் வந்து உட்கார்ந்து கொண்டான். அவன் தகப்பன் குளித்துக்கொண்டு இருந்தான். அப்போது திடீரென்று ஒரு முதலை பொன்னனைப் பிடித்துக்கொள்ள அவன் சமீபத்தில் வந்தது. அதைப் பொன்னன் பார்க்கவில்லை.

ஆனால், முதலை, தன் தகப்பனைப் பிடிக்க வருகிறதை முத்து பார்த்து விட்டான். உடனே அவன் பயந்து 'ஐயோ அப்பா முதலை! முதலை!' என்று கத்தினான். பொன்னனுக்குத்தான் காது கேட்காதே! அதனால் அவன் எதையும் கவனியாமல் குளித்துக் கொண்டே இருந்தான்.

தன் தகப்பனுக்குக் காது கேட்காது என்று முத்துக்குத் தெரியுமே! ஆனாலும், அவன் பயத்தால் அப்படிக் கத்தினான். ஓடிப்போய் பொன்னன் கையைப் பிடித்துக் கரைக்கு இழுத்துக்கொண்டு வரலாமா என்று முத்து நினைத்தான். அதற்குள் முதலை, பொன்னனைப் பிடித்துக் கொள்ளும் என்று முத்துவுக்குத் தெரிந்தது.

அதனால் முத்து, 'என் தகப்பனை நான் காப்பாற்ற வேண்டும். நான் இறந்தால் கஷ்டம் ஒன்றும் இல்லை. என் தகப்பன் இறந்தால் என் தம்பிமாரையும், தாயாரையும் யார் காப்பாற்றுவார்கள்' என்று நினைத்துத் திடீரென்று பாய்ந்து முதலை வாயில் குதித்தான்.

அதைக் கண்ட முதலை பொன்னனை விட்டு முத்துவைப் பிடித்துக்கொண்டது. பொன்னனுக்கு அப்போது தான் எல்லாம் தெரிந்தது! அவன் பயந்து 'ஓ!' என்று அழுதான். நல்ல காலம்! அப்போது அங்கே ஒருவன் ஒரு பெரிய ஈட்டியோடு வந்தான். அவன் அந்த ஈட்டியால், முதலையின் வயிற்றில் குத்தி அதைக் கொன்று முத்துவைக் காப்பாற்றினான். முத்து தப்பிப் பிழைத்தான். முதலை உடனே செத்தது. முத்து செய்த காரியம் எல்லோருக்கும் தெரிந்தது. அவனை அவர்கள் 'நல்ல மகன்' என்று கொண்டாடினார்கள். பார்த்தீர்களா முத்து செய்த காரியத்தை!

நல்ல பிள்ளைகளுக்குக் கடவுள் துணை இருப்பார்!



# 6 முழுமூடன்

ஒரு பட்டிக்காட்டில் ஒரு முழுமூடன் இருந்தான். அவனுக்கு எழுதவும் படிக்கவும் தெரியாது. அதிகம் என்ன! அவனுக்குக் கொஞ்சம்கூட புத்தியே கிடையாது. அதனால் அவனை எல்லோரும் 'முழுமூடன்' என்று கூப்பிடுவது வழக்கம்.

ஒருநாள் அந்த முழுமூடன் பட்டணத்தில் இருந்த அவனுடைய தமக்கையைப் பார்த்துவரப் போனான். அவன் அதற்குமுன் பட்டணத்தைப் பார்த்ததே இல்லை. அதனால் அவன் பட்டணம் போனதும் அங்கே இருந்த வேடிக்கைகளைப் பார்த்து அதிக ஆச்சரியப்பட்டான்.

முழுமூடனுடைய தமக்கையின் புருஷன்பெயர் கண்ணன். அவன் எதையும் பரிகாசமாகவே பேசுவான். பரிகாசமாகப் பேசினால் அபாயம் உண்டாகும் என்று கண்ணனுக்குத் தெரியாது.

ஒருநாள் இராத்திரி முழுமூடனும், கண்ணனும் சாப்பிட்டுக்கொண்டு இருந்தார்கள். அப்போது அங்கே ஒரு கண்ணாடி விளக்கு எரிந்துகொண்டு இருந்தது. முழுமூடன் கண்ணாடி விளக்கை எப்போதும் பார்த்ததே கிடையாது.

அதனால் முழுமூடன் கண்ணனுக்குக் கண்ணாடிவிளக்கைக் காட்டி, 'அது என்ன வெளிச்சமாய் இருக்கிறதே?' என்று ஆச்சரியத்தோடு கேட்டான். அதற்குக் கண்ணன் பரிகாசமாக, 'அதுதான் சூரியன் குஞ்சு! நான் அதை வெகு தூரத்தில் இருந்து அதிக விலைகொடுத்து வாங்கி வந்தேன்' என்றான். முழுமூடன் 'மெய்தான்' என்று

நம்பினான். அவன் அதை எப்படியாவது தன்னுடைய ஊருக்குக் கொண்டுபோக வேண்டும் என்று எண்ணினான்.

எல்லோரும் சாப்பிட்டு ஆனதும் படுத்துத் தூங்கினார்கள். அப்போதும் விளக்கு எரிந்துகொண்டு இருந்தது. முழுமூடன் ஒருவருக்கும் தெரியாமல் எழுந்து விளக்கு இருந்த இடத்திற்குப் போனான். 'ஆ! சூரியன் குஞ்சு எவ்வளவு அழகாய் இருக்கிறது' என்று விளக்கைப் பார்த்துச் சந்தோஷப்பட்டான். அதை எடுத்து எங்கேயாவது ஒளித்து வைத்தால் ஊருக்குப் போகும்போது கொண்டு போகலாம் என்று எண்ணினான்.

அதனால் அவன் அதை எடுத்து வீட்டின் கூரையில் ஒளித்து வைத்தான். பிறகு, சந்தோஷமாகப் படுத்துத் தூங்கிவிட்டான். கொஞ்சநேரம் ஆயிற்று. விளக்கின் நெருப்பினால் வீடு நன்றாகப் பற்றிக்கொண்டது. எல்லோரும், 'குய்யோ முறையோ' என்று தூக்கத்தை விட்டு எழுந்து வெளியே ஓடினார்கள். வீடும் எரிந்து சாம்பலாய் விட்டது. முழுமூடனுக்குச் சூரியன் குஞ்சுதான் வீட்டைக் கொளுத்தியது என்று தெரியாது!

பொழுது விடிந்ததும் எல்லோரும், 'ஏதாவது சாமான்கள் அகப்படாவா' என்று நெருப்பைக் கிளறிக்கொண்டு இருந்தார்கள். அப்போது முழுமூடனும் எதையோ தேடிக்கொண்டு இருந்தான். கண்ணன் அவனைப் பார்த்து, 'நீ என்ன தேடுகிறாய்?' என்று கேட்டான்.

அதற்கு முழுமூடன், 'நான் சூரியன் குஞ்சை வீட்டின் கூரையில் ஒளித்து வைத்தேன். அதைத் தேடுகிறேன்' என்று மெதுவாகச் சொன்னான். அதைக் கேட்ட

கண்ணன், 'ஓ! நீ தானா வீட்டைக் கொளுத்தினவன். சூரியன் குஞ்சை ஏன் கூரையில் வைத்தாய்?' என்று கோபத்தோடு அவனை அடித்தான். முழுமூடன், 'சூரியன் குஞ்சு வீட்டைக் கொளுத்தும் என்று எனக்குத் தெரியாதே' என்று சொல்லிக்கொண்டே ஓடி விட்டான். சிறுவர்களே! கண்ணன் கண்ணாடி விளக்கைச் சூரியன் குஞ்சு என்று பரிகாசமாகப் பொய் சொன்னான் அல்லவா? அதனால் இவ்வளவு ஆபத்தும் வந்தது.

பரிகாசமாகவும் பொய் பேசக்கூடாது.



## 7. கடவுள் நம்மைப் பார்க்கின்றார்

ஓர் ஊரில் நாராயணன், கோவிந்தன் என்னும் இரண்டு பிள்ளைகள் இருந்தார்கள். அவர்கள் இரண்டு பேரும் சிநேகிதர்கள். அவர்கள் இருவரும் ஒருநாள் ஒரு சாலையின்வழியே போய்க்கொண்டு இருந்தார்கள். வழியில் ஒரு தோட்டத்தில் ஒரு மாமரம் இருந்தது. அது ஒரு குடியானவனுக்குச் சொந்தமானது. அந்த மாமரத்தில் நிறையப் பழங்கள் இருந்தன.

அந்தப் பழங்களில் இரண்டைக் கோவிந்தன் திருடித் தின்ன ஆசைப்பட்டான். அவன் தன் எண்ணத்தை நாராயணனுக்குச் சொன்னான். அப்போது நாராயணன் 'கோவிந்தா! இந்த மாம்பழங்கள் நமக்குச் சொந்தம் அல்ல. இவைகளின் சொந்தக்காரன் கண்டால் நம்மைப் பிடித்து நன்றாய் அடிப்பான்' என்றான்.

அதற்குக் கோவிந்தன், 'நாராயணு! நன்ருய்ச் சொன்ருய்! இப்போது இங்கே யாரும் இல்லை. இவற்றின் சொந்தக்காரன் இப்போது வரமாட்டான். யார் நம்மைப் பார்க்கப்போகிருர்கள்' என்ருன்.



அதற்கு நாராயணன், 'கோவிந்தா, இவற்றின் சொந்தக்காரன் நம்மைப் பார்க்கமாட்டான் என்பது உண்மைதான். ஆனல் கடவுள் நம்மைப் பார்க்கின்ருர். அவர் எப்போதும் நம்மைப் பார்த்துக்கொண்டுதான் இருக்கின்ருர். இப்போது இந்த மாம்பழங்களைத் திருடினுலும்

அவருக்குத் தெரியும். அவர் தப்பாமல் நம்மைத் தண்டிப்பார். வா போகலாம்' என்றான்.

உடனே கோவிந்தன், 'ஆ! அப்படியா, இனிமேல் நான் திருட்டுவேலை செய்யவேமாட்டேன்' என்று சொல்லிக் கொண்டே நாராயணனோடு போனான்.

கடவுள் எல்லாம் அறிந்தவர்



## 8. நன்மை செய்தால் நன்மை உண்டாகும்

வடக்கே ஓர் ஊரில் ஒரு கிழவன் இருந்தான். அவன் மிகவும் உழைப்பாளி. கொஞ்சநேரம் சும்மா இருக்க மாட்டான். அவனுக்கு ஒரு தோட்டம் உண்டு. அந்தத் தோட்டத்தில் அந்தக் கிழவன் புதிது புதிதாகப் பழந் தரும் செடிகளையும், மரங்களையும் வைத்துப் பயிர்செய்து கொண்டே இருப்பான்.

அந்தக் கிழவனுக்கு வயது தொண்ணூற்று ஐந்து இருக்கும். அவன் இன்றைக்கோ நாளைக்கோ செத்துப் போவான் என்று அவனைப் பார்ப்பவர்கள் சொல்லுவார்கள். அப்படி இருந்தும் அந்தக் கிழவன் சுறு சுறுப்பாக ஏதாவது வேலை செய்துகொண்டே யிருப்பான். அவன் சோம்பேறியாய் இருக்கமாட்டான்.

ஒருநாள் அந்தக் கிழவன் தன்னுடைய தோட்டத்தில் மாஞ்செடிகளை நட்டுக்கொண்டு இருந்தான். அப்போது அந்த வழியாக அந்த ஊர் இராஜா குதிரைமேல் சவாரி வந்தார். அவர் மாஞ்செடி நட்டுக்கொண்டு இருந்த கிழவனைப் பார்த்து ஆச்சரியப்பட்டார். உடனே அவர்

அவனைப் பார்த்து, 'ஓ கிழவா! உனக்கு என்ன பைத்தியமா! இந்த மாஞ்செடிகள் வளர்ந்து மரமாகிப் பழம் பழுக்கும் வரையில் நீ உயிரோடு இருப்பாயா? நீ இன்னும் கொஞ்சநாளில் செத்துப் போவாய் என்று தெரிகிறதே? இந்த மாஞ்செடிகளால் உனக்கு என்ன நன்மை உண்டாகப்போகிறது. இந்தச் செடிகளை நீ ஏன் இவ்வளவு கஷ்டப்பட்டு நடுகிறாய்?' என்று பல கேள்விகளைக் கேட்டார்.

அதற்கு அந்தக் கிழவன், 'மகாராஜாவே! இந்தச் செடிகள் வளர்ந்து மரமாகிப் பழம் பழுப்பதற்குள் நான் செத்துப் போவேன் என்பது உண்மைதான்! ஆனாலும் என் பாட்டனாரும், தகப்பனாரும் நட்டுவைத்த மாஞ்செடிகள் இப்போது பெரிய மரங்களாய் இருக்கின்றன. அதில் பழுக்கும் பழங்களை நான் பறித்துச் சாப்பிடுகிறேன். அதைப்போல் இப்போது இந்த மாஞ்செடிகளை நான் நட்டுவைத்தால் இந்தச் செடிகளின் பழங்களை என் பிள்ளைகளும், பேரன்மாரும் சாப்பிடுவார்கள். அவர்களுக்காகவே இப்போது இந்தச் செடிகளை நான் நடுகிறேன். எனக்காக நடவில்லை' என்று சொன்னான்.

அந்த வார்த்தைகளைக் கேட்ட இராஜா சந்தோஷப்பட்டார். அவர் அந்தக் கிழவனை, அவனுடைய நல்ல குணத்திற்காகவும், புத்திசாலித் தனத்திற்காகவும் மெச்சினார். அதனால் அவர் அந்தக் கிழவனுக்கு நூறு ரூபாக்களினும் கொடுத்துவிட்டுப் போனார். நல்ல காரியத்தைச் செய்வதில் கண்ணாய் இருந்த கிழவனுக்கு நன்மையே கிடைத்தது அல்லவா?

நாம் பலருக்கும் உபயோகப்படும் காரியத்தையே செய்யவேண்டும்.

# 9. பேராசை பெரு நஷ்டம்

ஒரு குடியானவன் ஓர் ஊரில் இருந்தான். அவன் மிகவும் ஏழை. ஒருநாள் அவன் வீட்டிற்கு ஒரு சுவாமியார் வந்தார். அவர் நினைத்ததை எல்லாம் செய்யக்கூடியவர். அவருக்கு அந்தக் குடியானவன் வேண்டிய உபசாரங்களைச் செய்தான்.



அதனால் அந்தச் சுவாமியார் போகும்போது குடியானவன் இடம் இருந்த ஒரு வாத்திற்குப் பொன் முட்டையிடும் சக்தியை உண்டாக்கி விட்டுப் போனார். தினம் தினம் அந்த வாத்து ஒவ்வொரு பொன் முட்டை இட்டு வந்தது. பொன் அதிக விலை அல்லவா? அதனால் அந்தக் குடியானவன் கொஞ்ச நாளில் பெரிய பணக்காரன் ஆனான்.

பேராசையால் அந்தக் குடியானவனுக்கு ஒரு மூட எண்ணம் உண்டாயிற்று. அவன், 'நாம் ஏன் தினம் தினம் காத்துக்கொண்டு இருந்து, இந்த வாத்து இடும் முட்டைகளை எடுத்துக்கொள்ளவேண்டும்? அது கஷ்டம். இதன் வயிற்றை அறுத்து ஒரே தடவையில் உள்ளே இருக்கும் பொன்முட்டைகளையெல்லாம் எடுத்துக்கொள்ளலாம்' என்று நினைத்தான்.

உடனே அந்தமூடன் வாத்தைப் பிடித்துக் கத்தியால் அதன் வயிற்றை அறுத்துப் பார்த்தான். அதன் வயிற்றில் அன்று இடவேண்டிய ஒரே ஒரு பொன் முட்டை தான் இருந்தது. அதைக் கண்டதும் அந்தக் குடியானவன் திடுக்கிட்டு, 'ஐயோ, நான் புத்தி இல்லாமல் மோசம் போனேனே' என்று வருத்தப்பட்டான்.

பேராசை பெருநஷ்டம் அல்லவா ?



## 10. விளையாட்டால் மோசம் போனவன்

தெற்கே தென்னங்குடி என்று ஒரு கிராமம் இருந்தது. அந்தக் கிராமத்தில் முன்னொரு காலத்தில் ஆறு வீடுகள் இருந்தன. அவைகளில் ஒருவீடு தனியே கொஞ்சம் தூரத்தில் இருந்தது. அந்த வீட்டில் பொன்னன் என்னும் ஒரு மனிதன் இருந்தான்.

பொன்னன் விளையாட்டில் மிகவும் ஆசை உடையவன். விளையாட்டாக மற்றவர்களை ஏமாற்றுவதில் அவனுக்கு அதிக ஆசை உண்டு. ஒருநாள் இரவு பன்னிரண்டு மணி இருக்கும். அன்றையதினம் அமாவாசை. அமாவாசை இராத்திரி அதிக இருட்டாய் இருக்கும் அல்லவா ?

அப்போது பொன்னன் மற்றவர்களை ஏமாற்ற வேண்டும் என்று நினைத்தான். அவன் என்ன செய்தான் தெரியுமா? 'ஐயோ திருடன் வந்து விட்டான்! திருடன் வந்து விட்டான்!!' என்று பலமாகக் கூவினான். அவன் அப்படிக் கூவின சத்தம் கொஞ்சம் தூரத்தில் உள்ள வீடுகளில் இருந்தவர்களுக்குக் கேட்டது. அவர்கள் உண்மையாகவே திருடன்தான் வந்துவிட்டான் என்று நினைத்துப் பொன்னன் வீட்டுக்கு ஓடிவந்தார்கள்.

பொன்னன் ஓடி வந்தவர்களைப் பார்த்துச் சிரித்தான். 'பார்த்தீர்களா நான் உங்களை ஏமாற்றிவிட்டேன்' என்று பொன்னன் வந்தவர்களைப பரிகாசம் செய்தான். அவர்கள் வெட்கப்பட்டுத் தங்கள் வீடுகளுக்குப் போய் விட்டார்கள்.

பிறகு கொஞ்சம் நாள் ஆயிற்று. ஒருநாள் இராத்திரி பன்னிரண்டு மணிக்கு உண்மையாகவே ஐந்து, ஆறு திருடர்கள் பொன்னன் வீட்டிற்கு வந்தார்கள். பொன்னன் அவர்களைப் பார்த்து, 'ஐயோ திருடர்கள்! உண்மையாகவே வந்து விட்டார்களே! ஐயோ திருடர்கள்! திருடர்கள்!' என்றுகூவி 'ஓ' என்று அலறினான்.

அவன் முன்போல் விளையாட்டாக அப்படிக் கூவுகிறான் என்று அவனுக்கு ஒருவரும் உதவிசெய்ய வரவில்லை. திருடர்கள் பொன்னனை நன்றாய் அடித்து அவன் இடம் இருந்த ரூபாக்களை எடுத்துக்கொண்டு போய்விட்டனர். பொன்னன், 'என்னுடைய விளையாட்டுப் புத்தியால் அல்லவா எனக்கு இந்தக் கஷ்டம் வந்தது' என்று வருத்தப்பட்டான்.

நாம் விளையாட்டாகவும் பொய் சொல்லக்கூடாது



## 11. குள்ளநரியும் குள்ளநரிக் குட்டியும்

குள்ளநரியின் குட்டி ஒன்று ஒருநாள் ஒரு தோட்டத்தின் அருகில் விசனமாய் உட்கார்ந்து இருந்தது. அப்போது அதற்குப் பசி அதிகம்.

அப்போது அவ்வழியே ஒரு பெரிய குள்ளநரி வந்தது. அது தன் வாயில் ஒரு கோழியைக் கௌவிக் கொண்டு இருந்தது. அதைக் குட்டிக் குள்ளநரி பார்த்து விட்டது. அதற்கு எப்படியாவது பெரிய குள்ளநரி



வைத்திருக்கும் கோழியைத் தின்னவேண்டும் என்று ஆசை உண்டாயிற்று. அஃது எப்படி முடியும்? அதற்குக் குட்டிக் குள்ளநரி ஒரு தந்திரம் செய்தது. அஃது என்ன தெரியுமா?

அது பெரிய குள்ளநரியிடம்போய், 'அண்ணே! இதோ இந்தத் தோட்டத்தின் உள்ளே ஒரு சிறிய ஆட்டுக்குட்டி இருக்கிறது. அதைத் தூக்கிக்கொண்டுவர எனக்குப் பலம் இல்லை. நீங்கள் போனால் சுலபமாகத் தூக்கிவரலாம். இப்போது அங்கே ஒருவரும் இல்லை. வேண்டுமானால் நீங்கள் வருகிறமட்டும் நான் இந்தக் கோழியைப் பத்திரமாய் வைத்து இருக்கிறேன்' என்று சொல்லிற்று.

பெரிய குள்ளநரி அதன் வார்த்தையை உண்மை என்று நம்பியது. அதனால் அது கோழியை அதனிடம் கொடுத்துவிட்டு ஆட்டுக்குட்டியைப் பிடித்துவரத் தோட்டத்தின் உள்ளே போயிற்று. உடனே குட்டிக் குள்ளநரி இதுதான் சமயம் என்று கோழியைக் கௌவிக்கொண்டு ஓடி விட்டது.

தோட்டத்திற்குள் போன பெரிய குள்ளநரி அங்கே ஆட்டுக்குட்டியைக் காணாமல் திரும்பி வெளியே வந்தது; குட்டிக் குள்ளநரி அங்கே இல்லாததைக் கண்டு திடுக்கிட்டது; சுற்றிச் சுற்றிப் பார்த்தது. அப்போது, தன்னைக் குட்டிக் குள்ளநரி ஏமாற்றி விட்டது என்று அது தெரிந்து கொண்டது.

பிறகு அது, 'பேஷ்! என் ஜாதியில் பிறந்த அந்தக் குட்டிக் குள்ளநரி இதற்குள் இவ்வளவு தந்திரம் உள்ளதாய் இருக்கிறது அல்லவா! அஃது எனக்குச் சந்தோஷமே!' என்று பெருமை பேசிக்கொண்டே ஓடிவிட்டது.

பொருளைப் பறிகொடுத்தவர்கள் இப்படிப் பேசுவது வழக்கமே!



## 12. யோக்கியதை யுள்ள சிறுவன்

கண்ணன் என்னும் பெயர் உள்ள ஒரு சிறுவன் ஒரு கிராமத்தில் இருந்தான். அவனுக்குத் தாயும் இல்லை; தகப்பனும் இல்லை. அவன் குழந்தையாய் இருக்கும்போதே அவர்கள் இறந்து போனார்கள். அதனால் அவனைக் காப்பாற்றுகிறவர்கள் ஒருவரும் இல்லை. அவன் மிகவும் ஏழை.

கண்ணனுக்கு வயது பத்து இருக்கும். பட்டணம் போனால் பிழைக்கலாம் என்று அவனுக்கு ஒருவர் சொன்னார். அதனால் அவன் பட்டணத்திற்குப் போனான். அங்கே போனதும் அவனுக்கு நல்ல வேலை ஒன்றும் கிடைக்கவில்லை. அதனால் அவன் கடைகளில் மூட்டை முடிச்சுகளைக் கூலிக்குத் தூக்கிப் பிழைத்துக்கொண்டு இருந்தான்.

ஒருநாள் ஒரு பிரபு கடைக்கு வந்தார். அவர் அநேக சாமான்களை வாங்கினார். அந்தச் சாமான்களை வீட்டுக்கு எடுத்துக்கொண்டு போக அவர் ஒரு கூலி ஆளைத் தேடினார். அப்போது அங்கே இருந்த கண்ணன் அந்தச் சாமான்களை எடுத்துக்கொண்டு பிரபுவின் வீட்டிற்குப் போனான். பொழுதும் போய் விட்டது. வீட்டிற்குப் போனதும் அந்தப் பிரபு கண்ணன் இடம் இருந்த சாமான்களை வாங்கிக் கொண்டார். பிறகு அவர் நான்கு காலணாவை அவனிடம் கொடுத்து, 'எடுத்துக்கொள்' என்று சொல்லி அனுப்பி விட்டார்.

கண்ணன் கொஞ்ச தூரம் போனதும் தன் கையில் இருந்த நான்கு காலணாவையும் பார்த்தான். உடனே அவனுக்கு ஆச்சரியம் உண்டாயிற்று! ஏன் தெரியுமா? அந்த நான்கு காலணாவோடு ஒரு தங்கக் காசும் இருந்தது. அதை அந்தப் பிரபு கைதவறிக் கண்ணனுக்குக் கொடுத்து விட்டார். தங்கக் காசு அதிக விலையுள்ளது! அதைக் கண்ணன் எடுத்துக் கொண்டானா? இல்லை.

கண்ணன் தங்கக் காசைக் கண்டதும் வேகமாகப் பிரபுவின் வீட்டிற்கு ஓடினான். அந்தப் பிரபு அவனைப் பார்த்து, 'பையா! என்ன சமாசாரம்? ஏன் ஓடி வந்தாய்?' என்று கேட்டார். அதற்குக் கண்ணன், 'ஐயா!

நீங்கள் எனக்குக் கொடுத்த நான்கு காலணுவோடு ஒரு தங்கக் காசையும் தவறிக் கொடுத்து விட்டீர்கள். இதோ பாருங்கள்!' என்று அவரிடம் அந்தத் தங்கக் காசைக் கொடுத்தான்.

பிரபு அவனுடைய நல்ல குணத்திற்குச் சந்தோஷப் பட்டார். அதனால் கண்ணனை அந்தப் பிரபு தம்முடைய கடையில் வேலைக்கு வைத்துக்கொண்டார். கொஞ்சம் நாளில் கண்ணன் கெட்டிக்காரன் என்று பேரெடுத்தான். அதனால் அந்தப்பிரபு தன் மகளையே கண்ணனுக்குக் கலியாணம் செய்து கொடுத்தார். கடைசியில் கண்ணனே அந்தப் பிரபுவின் சொத்துக்குச் சொந்தக்காரன் ஆனான். யோக்கியன் ஏழையாய் இருந்தாலும் பணக்காரன் ஆவான்



## 13. நான்கு மூடர்கள்

ஓர் ஊரில் சுவாமியார் ஒருவர் இருந்தார். அவருக்கு மட்டி, முட்டாள், மூடன், மந்தன் என்னும் பெயர்களை உடைய நான்கு சீடர்கள் இருந்தார்கள். அவர்கள் நான்கு பேருக்கும் கொஞ்சம்கூட புத்தி கிடையாது.

ஒருநாள் சுவாமியாரின் இடுப்பில் இருந்த துணி கொஞ்சம் கிழிந்துவிட்டது. சுவாமியார் அதைத் தைக்க வேண்டும் என்று நினைத்தார். துணியைத் தைப்பதற்கு ஊசியும் நூலும்வேண்டும் அல்லவா? சுவாமியாரிடத்தில் நூல் இருந்தது; ஊசி இல்லை. அதனால் சுவாமியார் மூடனைக் கூப்பிட்டார். அவனிடம் ஒரு ரூபா கொடுத்துப் பக்கத்தில் உள்ள பட்டணத்திற்குப் போய் ஓர் ஊசி வாங்கி வரும்படி சொன்னார். மூடன் சந்தோஷத்துடன்

மட்டி, முட்டாள், மந்தன் ஆகியமூன்று பேரையும் தன்னோடு கூட்டிக்கொண்டு ஊசி வாங்கிவரப் போனான்.

கொஞ்சம் நேரத்தில் அவர்கள் பட்டணம் போனார்கள். உடனே மூடன் ஒரு கடைக்குப்போய் கடைக்காரன் இடம் ஒரு ரூபா கொடுத்து, 'ஐயா! இந்த ரூபாவுக்கு ஓர் ஊசி கொடுங்கள். ஊசி எங்கள் சுவாமியாருக்கு வேண்டும்' என்று கேட்டான். கடைக்காரன் அவன் புத்தி இல்லாதவன் என்பதைத் தெரிந்துகொண்டான். அதனால் அவன் ஒரு ரூபாவை வாங்கிக்கொண்டு ஒரு ஊசியை எடுத்து மூடன் கையில் கொடுத்தான்.

மூடன் ஊசியைக் கையில் வாங்கி, 'இஃது எவ்வளவு அழகாய் இருக்கிறது' என்று சொல்லிக்கொண்டே அதை மற்றவர்களுக்குக் காட்டினான். அப்போது மந்தன், 'சரி தான், அந்த ஊசியை என்னிடம் கொடு. நான் எடுத்து வருகிறேன்' என்றான். அப்போது மட்டி 'இல்லை, அந்த ஊசியை நான்தான் எடுத்துவர வேண்டும்' என்றான். முட்டாள், 'இல்லை, இல்லை. நான்தான் கொண்டுவருவேன்' என்றான்.

இப்படி இவர்கள் பேசிக்கொண்டே பட்டணத்திற்கு வெளியே வந்தார்கள். அப்போது மூடன், 'ஓர் ஊசியை நான்குபேர் எப்படி எடுத்துக்கொண்டுபோக முடியும்? ஆகையால் நான் ஒரு யோசனை சொல்லுகிறேன் கேளுங்கள். இந்த ஊசியை அதோ தரையில் கிடக்கும் பனை மரத்தில் குத்திவைத்து, நாம் நான்குபேரும் பனைமரத்தைத் தூக்கிக்கொண்டு போவோம். சுவாமியார் இடத்தில் போனதும் ஊசியைப் பனைமரத்தில் இருந்து எடுத்துக்கொள்ளலாம்' என்றான்.

'அதுதான் நல்ல யோசனை' என்று மட்டியும், மூட்டாளும், மந்தனும் ஒப்புக்கொண்டார்கள். பிறகு அவர்கள் ஊசியைப் பனைமரத்தில் குத்திவைத்து அந்த மரத்தைத் தூக்கிக்கொண்டு போனார்கள்.



கஷ்டப்பட்டு அந்த மரத்தைக் கொண்டுபோய்ச் சுவாமியாரின் எதிரே தொப்பென்று போட்டார்கள். பிறகு ஊசியைத் தேடினார்கள். அது வழியில் எங்கேயோ விழுந்து விட்டது. அதனால் அது அகப்படவில்லை. உடனே நான்கு மூடர்களும் பயந்தார்கள்.

சுவாமியார் 'நடந்த சமாசாரம் என்ன?' என்று கேட்டார். அவர்கள் உள்ளதைச் சொன்னார்கள். அதைக்கேட்ட சுவாமியார் அவர்களுடைய மூடத்தனத்திற்கு மிகவும் வருத்தப்பட்டார்.

மூடர்களால் எப்போதும் துக்கமே உண்டாகும்



## 14. வீண் வேடிக்கை பார்க்காதே!

ஓர் ஊரில் சங்கரன் என்னும் பெயர்உள்ள ஓர் ஏழைப் பையன் இருந்தான். அவன் மிகவும் நல்லவன். ஆனால் வீண்வேடிக்கை பார்க்கும் கெட்ட வழக்கம் மட்டும் அவனிடத்தில் உண்டு.

ஒருநாள் அவன் ஒரு பிரபுவைத் தனக்கு ஏதாவது ஒரு வேலை தரும்படி கேட்டான். அவர் மறுநாள் சாயந்திரம் நான்கு மணிக்கு வரும்படி சொன்னார். 'நல்லது' என்று அவன் தன் வீட்டிற்குப் போனான். மறுநாள் சாயந்திரம் சங்கரன் பிரபுவின் வீட்டிற்குப் போகப் புறப்பட்டான்.

வழியில் அவன் தன்னுடைய சிநேகிதனாகிய வேலன் என்பவனைக் கண்டான். வேலன் சங்கரனைப் பார்த்து, 'சங்கரா! பக்கத்துத் தெருவில் சிலர் கரடியை வைத்துக்கொண்டு வேடிக்கை காட்டுகிறார்கள். வேடிக்கை நன்றாய் இருக்கிறது. வருகிறாயா?' என்று கேட்டான். வேடிக்கை என்றால் சங்கரனுக்குப் பிரியம் அல்லவா? அதனால் அவன் வேலனோடு கரடியின் வேடிக்கையைப் பார்க்கப் போனான்.

வேடிக்கை முடிந்ததும் சங்கரன் தன்னை வரச் சொன்ன பிரபுவைப் போய்க் கண்டான். அப்போது மணி ஐந்துக்கு அதிகம் ஆயிற்று. அதனால் அந்தப் பிரபு சங்கரனைப் பார்த்து, 'சங்கரா, உன்னை நான் நான்கு மணிக்கு வரச்சொன்னேன். நீ அப்படி வரவில்லை. முதலிலேயே நான் சொன்னபடி செய்ய நீ தவறி விட்டாய். உன்னை நான் வேலைக்கு வைத்துக்கொண்டால் நீ ஒழுங்காகவே

நடக்க மாட்டாய் என்று தெரிகிறது. உனக்கு வேலை கொடுக்க முடியாது. நீ போகலாம்' என்று சொல்லி அனுப்பி விட்டார்.

'வேடிக்கை பார்க்கும் குணத்தால் அல்லவா நமக்கு வேலை கிடைக்கவில்லை' என்று சங்கரன் வருத்தத்தோடு வீட்டிற்குப் போனான்.

வீண் வேடிக்கை பார்க்கக் கூடாது



## 15. பேராசை உள்ள சிங்கம்

ஒரு காட்டில் சிங்கம் ஒன்று பசியால் அலைந்துகொண்டு இருந்தது. கடைசியாக அந்தச் சிங்கம் செடிகள் நெருங்கி வளர்ந்து இருந்த ஓர் இடத்திற்குப் போயிற்று. அங்கே ஒரு முயல் படுத்துத் தூங்கிக்கொண்டு இருந்தது. அதை அந்தச் சிங்கம் பார்த்தது.

'ஆகா! இந்த முயலைப் பிடித்துத் தின்னவேண்டும்!' என்று சிங்கம் எண்ணிற்று. முயலின்மீது பாயவும் ஆரம்பித்தது. அப்போது ஒரு மான் அந்த வழியே ஓடிற்று. அதைக்கண்ட சிங்கம், 'இந்த மானைப் பிடித்தாலும் வயிறு நிறையத் தின்னலாம். இந்த முயல் எம்மாத்திரம்' என்று முயலை விட்டு மானைப் பிடிக்க ஓடிற்று.

மானும் சிங்கமும் ஓடினதால் உண்டான சத்தத்தால் முயல் தூக்கத்தைவிட்டு விழித்துக்கொண்டது. உடனே அந்த முயல் அந்த இடத்தை விட்டு ஓடிப்போயிற்று.

மானைத் துரத்திக்கொண்டு சிங்கம் போயிற்று அல்லவா? மான் ஓட்டத்தை அதனால் பிடிக்க முடிய

வில்லை. மான் சிங்கத்தின் இடம் அகப்படாமல் ஓடிப் போயிற்று. அது போனால் போகட்டும். தூங்கிக் கொண்டு இருக்கும் முயலையாவது பிடித்துத் தின்போம் என்று சிங்கம் நினைத்தது. பிறகு அது, முயல் தூங்கிக் கொண்டு இருந்த இடத்திற்கு வந்தது. அங்கே முயல் இல்லாததைக் கண்டதும் சிங்கத்திற்கு அதிக வருத்தம் உண்டாயிற்று.

பிறகு அந்தச் சிங்கம், 'நான் கையில் கிடைத்த முயலை விட்டு அதிக ஆசையால் மான் பின்னால் ஓடினேன். இப்போது முயலும் ஓடிப்போயிற்று. பசியும் அதிகமாய் இருக்கிறது! என்ன செய்யலாம்! அதிக ஆசை அதிக நஷ்டம்' என்று சொல்லிக் கொண்டே போய்விட்டது.

அதிகமாய் ஆசைப்பட்டால் உள்ளதும் போய்விடும்

## 16. 'எங்கள் அப்பன் குதிருக்குள் இல்லை'

துரிஞ்சாபுரம் என்னும் கிராமத்தில் ஒரு குடியானவன் இருந்தான். அவன் பெயர் மாரியப்பன். அவன் பெரிய பணக்காரன். அவனுக்கு இரண்டு பிள்ளைகள் இருந்தார்கள். அந்த இரண்டு பிள்ளைகளும் சுத்த மூடர்கள். அவர்களுக்குப் புத்தி கொஞ்சமும் இல்லை.

ஒருநாள் இராத்திரி அந்தக் குடியானவனும், அவன் மூடப் பிள்ளைகளும் சாப்பிட்டுக்கொண்டு இருந்தார்கள். அப்போது அந்தக் கிராமத்திற்குத் திடீரென்று நூறுபேர் திருடர்கள் வந்தார்கள். அந்தக் கிராமத்தில் இருந்தவர்கள் திருடர்களைக் கண்டதும் பயந்து ஓடிப்போய் விட்டார்கள்.

மாரியப்பன் மட்டும் அப்படி ஓடிப்போகவில்லை. அவன் பணக்காரன் அல்லவா? அவன் இடத்தில் ஏராளமாக ரூபாக்கள் இருந்தன. அதை எடுத்துக்கொண்டு அவனால் ஓட முடியுமா? ஆகையால், அவன் என்ன செய்தான் தெரியுமா? அவன் எல்லா ரூபாக்களையும் ஒரு பெட்டியில் வைத்துப் பூட்டினான். அந்தப் பெட்டியை அங்கே இருந்த ஒரு குதிருக்குள் மறைத்து வைத்தான்.

பிறகு அவன் தன் இரண்டு பிள்ளைகளையும் பார்த்து, 'நான் இந்தக் குதிருக்குள் ஒளிந்து கொள்ளுகிறேன். திருடர்கள் வந்து கேட்டால் நான் குதிருக்குள் இருக்கிறேன் என்று சொல்லாதீர்கள்' என்றான். அதற்கு அந்த மூடப் பிள்ளைகள் 'நல்லது அப்பா, அப்படியே ஆகட்டும்!' என்றார்கள். பிறகு மாரியப்பன் பணப்பெட்டி இருந்த குதிருக்குள் ஒளிந்து கொண்டான்.

மாரியப்பன் பணக்காரன் என்று திருடர்களுக்குத் தெரியும். அதனால் அவர்கள் கொஞ்சம் நேரத்தில் மாரியப்பன் வீட்டிற்குள் வந்தார்கள். திருடர்களைக் கண்டதும் மாரியப்பனுடைய பிள்ளைகள் ஒரு மூலையில் ஒளித்துக் கொண்டனர். திருடர்கள் அந்தப் பிள்ளைகளைக் கண்டு பிடித்துப் பயமுறுத்தி, 'உங்கள் அப்பன் எங்கே?' என்று கேட்டார்கள். அதற்கு அந்த மூடப் பிள்ளைகள், என்ன சொன்னார்கள் தெரியுமா அவர்கள் திருடர்களைப் பார்த்து, 'எங்கள் அப்பன் குதிருக்குள் இல்லை' என்றார்கள். அதைக் கேட்ட திருடர்கள், 'ஓகோ! மாரியப்பன் குதிருக்குள் இருக்கிறான் என்று தெரிகிறது. அதனால் தான் இந்தப் பிள்ளைகள் இப்படிச் சொன்னார்கள்' என்று சொல்லிக் கொண்டே குதிருக்குள் எட்டிப் பார்த்தார்கள். மாரியப்பன் பணப் பெட்டியோடு அகப்பட்டுக்கொண்டான்.

திருடர்கள் அவனை அடித்துப் பணப் பெட்டியை எடுத்துக்கொண்டு போய்விட்டார்கள். மாரியப்பன், 'என்னுடைய மூடப் பிள்ளைகளால் அல்லவோ எனக்கு இந்தக் கஷ்டம் வந்தது' என்று வருத்தப்பட்டான்.

மூடப் பிள்ளைகளால் மோசம் உண்டாகும்



## 17. என் குஞ்சு பொன்குஞ்சு

ஒருநாள் ஒரு வேடன் ஏதாவது பறவைகளைப் பிடித்து வரலாம் என்று ஒரு காட்டுக்குப் போனான். அநேகம் பறவைகள் அவனுக்கு அகப்பட்டன. பிறகு அவன்



கொஞ்சதூரம் போனான். அங்கே ஒரு மரத்தில் ஒரு புறா இருந்தது. அந்தப் புறா வேடனைப் பார்த்து, 'வேடா!

என்னைப் பிடிக்காதே. கொஞ்ச தூரம்போனால் அங்கே ஒரு மரத்தில் ஒரு புறாக் குஞ்சு இருக்கும். அஃது என்னுடைய பொன் குஞ்சு, அதையும் பிடிக்காதே' என்று வேண்டிக்கொண்டது.

வேடன் 'நல்லது' என்று கொஞ்ச தூரம் போனான். அநேகம் பறவைகளைப் பிடித்துக் கூடையில் வைத்துக் கொண்டான். அங்கே ஒரு மரத்தில் ஒரு புறாக் குஞ்சு இருந்தது. அவன் அதையும் பிடித்துக் கொன்று கையில் வைத்துக்கொண்டு வீட்டிற்குத் திரும்பினான். வழியில் அவன், முன்னே தன்னோடு பேசிய புறாவைப் பார்த்தான். அந்தப் புறா வேடன் கையில் இருக்கும் தன் குஞ்சைப் பார்த்துவிட்டது. அது துக்கத்தோடு வேடனைப் பார்த்து, 'அடா படுபாவி! என் பொன் குஞ்சையும் பிடித்துக் கொன்றுவிட்டாயே!' என்று வருத்தப்பட்டது.

அதற்கு வேடன், 'என்ன, இதுவா பொன்குஞ்சு? பொன் குஞ்சு இப்படியா இருக்கும்? பொன் மஞ்சள் நிறம் அல்லவோ?' என்று கேட்டான்.

அதற்கு அந்தப் புறா, 'மூடா, காக்கைக்கும் தன் குஞ்சு பொன்குஞ்சுதான். இஃது உனக்குத் தெரியாதா? இது தெரியாத உன்னிடம் என் குஞ்சு பொன் குஞ்சு என்று நான் சொன்னது பிசகுதான்' என்று துக்கத்தோடு சொல்லிக்கொண்டே பறந்து போய்விட்டது.

மூடர்களுக்கு வார்த்தையின் கருத்துத் தெரியாது



## 18. வீமனும் பகாசூரனும்

வேத்திரகீயம் என்று ஓர் ஊர் இருந்தது. அந்த ஊரில் பிராமணர்களே அதிகமாய் இருந்தார்கள். அப்போது அந்த ஊருக்குக் கொஞ்சம் தூரத்தில் ஒரு மலை இருந்தது. அந்த மலையில் பகாசூரன் என்று ஓர் இராக்ஷசன் இருந்தான். அவன் மிகவும் பலம் உள்ளவன். மனிதர்களை உயிரோடு பிடித்துத் தின்பதில் உருசி கண்டவன். அதனால் அவன் பிராமணர்கள் இருக்கும் ஊருக்குள் ஒவ்வொரு நாளும் வந்து மனிதர்களைப் பிடித்துத் தின்பான். அவனைக் கேட்பார் இல்லை. அதனால் அவனுக்குக் கர்வம் அதிகமாய் இருந்தது.

அந்த ஊரார் என்ன செய்வார்கள் பாவம்! அவர்கள் எல்லாரும் ஒருநாள் கும்பலாகப் பகாசூரன் இடம் போனார்கள். அந்தச் சூரன், 'மனிதப் பூச்சிகளே எங்கே வந்தீர்கள் ?' என்று கேட்டான்.

அவர்கள் பயந்துகொண்டு, 'ஐயா, நாங்கள் தினம் ஒன்றுக்கு ஒரு வண்டி சோறும், ஒரு மனிதனும் உங்களுக்குத் தின்னக்கொடுக்கின்றோம். எங்களை நீங்கள் கண்டபடி கொல்லவேண்டாம்' என்று கெஞ்சிக் கேட்டார்கள். அதற்கு அந்த இராக்ஷசன், 'அப்படியே செய்யுங்கள்' என்று ஒப்புக்கொண்டான். அது முதல் அவர்கள், அவனுக்கு ஒவ்வொரு நாளும் ஒரு வண்டி சோறும், ஒரு மனிதனும் ஆகாரமாகக் கொடுத்து வந்தார்கள்.

சிறிதுகாலம் ஆயிற்று. வீமசேனன் என்று ஒரு பலவான் அந்த ஊருக்கு வந்தான். அவன் பகாசூரனுக்குமேல் பலம் உள்ளவன். அவன் ஒரு பிராமணன் வீட்டில் தங்கினான். அன்றைக்கு அந்த வீட்டுப்

பிராமணப்பிள்ளை பகாசூரனுக்குச் சோறு கொண்டுபோக வேண்டியதாய் இருந்தது. அதனால், அந்தப் பிள்ளையின் தாயும் தகப்பனும் அழுதார்கள். 'ஏன் அழுகிறீர்கள்?' என்று வீமசேனன் கேட்டான். அவர்கள் எல்லா விஷயங்களையும் சொன்னார்கள்.

அதைக் கேட்ட வீமசேனன், 'அந்தப் பிராமணப் பிள்ளை பகாசூரன் இடத்திற்குப் போக வேண்டாம்' என்று சொன்னான். பிறகு அந்தப் பிள்ளைக்குப் பதில் வீமசேனன் பகாசூரனுக்குச் சோறு கொண்டுபோனான். பகாசூரன் வீமசேனனையும், சோற்றையும் தின்ன மலையில் இருந்து இறங்கி வந்தான். வீமசேனன் அவனோடு சண்டைசெய்து அவனைக் கொன்றுவிட்டான். அதைக் கண்ட அந்த ஊரார் ஆச்சரியப்பட்டு வீமசேனனைக் கொண்டாடினார்கள். பகாசூரன் தனக்குமேல் பலம் உள்ளவர்கள் இல்லை என்று கர்வம்கொண்டு இருந்தான் அல்லவா? அப்படிப்பட்டவனை வீமசேனன் கொன்றுவிட்டான் பார்த்தீர்களா!

ஆகையால் கர்வம் ஒருபோதும் கூடாது



## 19. தந்திரத் திருடன்

மைலாப்பூரில் ஒரு திருடன் இருந்தான். அவன் மிகவும் தந்திரம் உள்ளவன். திருடுவதில் கெட்டிக்காரன். அவன் வீட்டுக்குப் பக்கத்தில் ஒரு தென்னந்தோப்பு இருந்தது. அந்தத் தோட்டத்தில் அவன் பொழுது போனதும் நுழைவான்; தென்னமரத்தில் ஏறித் தேங்காய்களைத் திரு

டிக்கொண்டு வருவான். இந்தச் சமாசாரம் ஒருவருக்கும் தெரியாமலே இருந்தது.

ஆனாலும் எப்போதும் அப்படியே நடக்குமா? திருடு கிறவன் ஒருநாளைக்கு எப்படியாவது அகப்பட்டுக் கொள் ளுவான் அல்லவா? ஒருநாள் அந்தத் திருடன் தேங்காய் பறிக்க மரத்தில் ஏறினான். அப்போது தோட்டக்காரன் எப்படியோ அவனைப் பார்த்துவிட்டான். அதைத் திரு டன் தெரிந்துகொண்டு மரத்தில் இருந்து மெதுவாகக் கீழே இறங்கினான். உடனே அந்தத் தோட்டக்காரன், 'யாரடா நீ மரத்தில் ஏறினவன்?' என்று கேட்டான்.

அதற்கு அந்தத் திருடன் பயப்பட்டானா? இல்லை. அவன் தோட்டக்காரனைப் பார்த்து, 'நான்தான் அண்ணே! கன்றுகுட்டிக்குக் கொஞ்சம் புல்பிடுங்குவதற்குத் தென்ன மரத்தில் ஏறினேன்' என்று தந்திரமாகச் சொன்னான். தோட்டக்காரன் கொஞ்சம் மூடன். அதனால் அவன் திருடன் வார்த்தையை உண்மை என்று நம்பினான்.

பிறகு அந்தத் தோட்டக்காரன் சிரித்துக்கொண்டே திருடனைப் பார்த்து, 'தென்னமரத்தில் எங்கேயாவது புல் இருக்குமா?' என்று கேட்டான். அதற்குத் திருடன், 'தென்னமரத்தில் புல் இல்லை. அதனால்தான் நான் சும்மா இறங்கினேன்' என்று சொல்லிக் கொண்டே போய்விட் டான். பார்த்தீர்களா திருடனுடைய தந்திரத்தை!

திருடர்கள் பேச்சை நம்பக் கூடாது



## 20. பெருமாள் பெரிய பெருமாள் ஆனது

ஒரு கிராமத்தில் ஒரு பெரிய பணக்காரர் இருந்தார். அவருக்கு அநேகம் ஆடுமாடுகளும், நிலங்களும் உண்டு. அவரிடத்தில் ஒரு வேலைக்காரன் இருந்தான். அவன் பெயர் பெருமாள். அவனைப் பெருமாள் என்று கூப்பிட அந்தப் பணக்காரருக்கு இஷ்டம் இல்லை.

ஒரு நாள் அவர் அவனைப் பார்த்து, 'அடே! உன்னை நான் இனிமேல் பெருமாள் என்று கூப்பிடமாட்டேன். நீ அந்தப் பெயரை மாற்றிவிட்டு வேறு ஏதாவது ஒரு பெயர் வைத்துக்கொள். அதற்கு ஏதாவது ரூபா வேண்டுமானாலும் தருகிறேன்' என்றார்.

பெருமாள் என்பவன் கொஞ்சம் புத்திசாலி. அவன் அந்தப் பணக்காரரைப் பார்த்து, 'ஐயா! உங்கள் இஷ்டம் போல் நான், எனக்கு வேறு ஏதாவது ஒரு பெயர் வைத்துக்கொள்ளுகிறேன். அதற்கு நான் திருப்பதிக்குப்போய் வரவேண்டும். நூறு ரூபா செலவு ஆகும்' என்றான். உடனே அந்தப் பணக்காரர் அவனுக்கு நூறு ரூபா கொடுத்தார். பெருமாள் அந்த ரூபாய்களை வாங்கிக் கொண்டு சந்தோஷமாக வீட்டுக்குப் போனான்.

ஐந்துநாள், பெருமாள் தன்னுடைய வீட்டில் இருந்தான். ஆறாவது நாள் அவன் அந்தப் பணக்காரரைப் போய்ப் பார்த்தான். அப்போது அந்தப் பணக்காரர், 'அடே! இப்போது உன்னுடைய புதுப்பெயர் என்ன? சொல் கேட்போம்' என்றார்.

அதற்குப் பெருமாள் என்ன சொன்னான் தெரியுமா? 'ஐயா! என்னுடைய பெயர் பெரிய பெருமாள்' என்று

சொன்னான். அதைக் கேட்டதும் அந்தப் பணக்காரர் திடுக்கிட்டுப் போனார். 'இவன் நம்மை ஏய்த்து விட்டானே' என்று அவர் வருத்தப்பட்டார்.

வீணான காரியத்தால் வருத்தமே உண்டாகும்!



## 21. குரங்கும் முதலையும்

ஒரு பெரிய ஆற்றின் ஓரத்தில் ஒரு நாவல் மரம் இருந்தது. அதில் பழங்கள் நன்றாய்ப் பழுத்து இருந்தன. ஒரு குரங்கு, அந்த நாவற் பழங்களைப் பறித்துத் தின்னும் போது, தவறிக் கீழே ஓடும் ஆற்றில் விழுந்துவிட்டது.

ஆற்றில் வெள்ளம் அதிகமாய் இருந்தது. வெள்ளம் குரங்கை நடு ஆற்றுக்கு அடித்துக்கொண்டு போயிற்று! குரங்கினால் நீந்திக்கொண்டு கரைக்கு வர முடியவில்லை! இன்னும் கொஞ்ச நேரம் இருந்தால் குரங்கு, தண்ணீரில் முழுகிவிடும். அதனால் குரங்குக்கு அதிக பயம் உண்டாயிற்று.

அப்போது அங்கே ஒரு முதலை வந்தது. குரங்கு தன்னைக் கரையில் கொண்டுபோய் விடும்படி முதலையை வேண்டிக்கொண்டது. முதலைக்குப் பரிதாபம் உண்டாயிற்று. ஆனால் அது குரங்கைப் பார்த்து, 'நான் பொய் சொல்லாதவர்களுக்குத்தான் உதவி செய்வேன். உனக்கு உதவி செய்யமாட்டேன்' என்றது.

அதைக் கேட்ட குரங்கு, 'ஐயா முதலையாரே! நான் பொய் பேசுவதே இல்லை. எனக்கு உதவி செய்யும்' என்று வேண்டிக்கொண்டது. 'அப்படியானால் என் முதுகின்மேல் ஏறிக்கொள். உன்னை நான் கரையில்

கொண்டுபோய்ச் சேர்க்கின்றேன்' என்று முதலை சொல்லிற்று. அப்படியே முதலையின் முதுகின்மேல் குரங்கு ஏறிக்கொண்டது.



கொஞ்சதூரம் போனதும் முதலை குரங்கைக் கூப்பிட்டு, 'குரங்காரே! நீர் கரைக்குப் போனதும் உம்மைப் பார்த்து யாராவது ''ஆற்றில் இருந்து எப்படித் தப்பி வந்தாய்?'' என்று கேட்டால் நீர் என்ன சொல்வீர்?' என்று கேட்டது. அதற்கு அந்த மூடக் குரங்கு, 'என்னை யாராவது கேட்டால் நீந்திக்கொண்டு வந்தேன் என்று சொல்வேன்' என்றது.

அதைக் கேட்ட முதலை, 'ஓ குரங்கே! இதோ நீ பொய் சொல்லிவிட்டாய். உன்னை இனிமேல் உயிரோடு விடமாட்டேன்' என்று சொல்லி அதைப் பிடித்துத் தின்றுவிட்டது.

பொய் பேசினல் ஆபத்து வரும்



## 22. அத்தரி ப்பாச்சா

கலசபாக்கம் என்னும் ஓர் ஊரில் வேலன் என்று ஒருவன் இருந்தான். அவன் அதிக மூடன். அவனுக்கு ஞாபகம் கொஞ்சமும் கிடையாது. அவன் யார் எதைச் சொன்னாலும் உடனே மறந்துவிடுவான். அஃது அவனுக்கு அதிகக் கஷ்டமாய் இருந்தது.

ஒருநாள் வேலன் பக்கத்து ஊரில் இருந்த தன்னுடைய அக்காள் வீட்டிற்குப் போனான். அங்கே அவன் இரண்டு நாள் இருந்தான். பிறகு தன் ஊருக்குப் போகப் புறப்பட்டான். அப்போது அவன் அக்காள் கொழுக்கட்டை சுட்டாள். அதில் வேலனுக்கும் இரண்டு மூன்று கொடுத்தாள். வேலன் எப்போதும் கொழுக்கட்டையைப் பார்த்ததே இல்லை. அதனால் அவன் அவனுடைய அக்காளைப் பார்த்து, 'அக்கா, இஃது என்ன?' என்று கேட்டான்.

அதற்கு அவனுடைய அக்காள், 'தம்பி! இஃது உனக்குத் தெரியாதா! இதன் பெயர் கொழுக்கட்டை' என்று சொன்னாள். 'ஓ அப்படியா!' என்று வேலன் அந்தக் கொழுக்கட்டைகளைத் தின்றான். கொழுக்கட்டைகள் மிகவும் உருசியாய் இருந்தன. பிறகு அவன், 'நாம் ஊருக்குப் போனதும் நம்முடைய பெண்சாதியைக் கொழுக்கட்டை சுடச் சொல்லவேண்டும்' என்று நினைத்தான். பிறகு ஒரு நாள் அவன் அவனுடைய அக்காள் இடம் சொல்லிக்கொண்டு, தன் ஊருக்குப் புறப்பட்டான்.

பேர் மறந்து போகாமல் இருப்பதற்காக வேலன் 'கொழுக்கட்டை, கொழுக்கட்டை' என்று சொல்லிக்

கொண்டே போனான். வழியில் ஒரு சிறிய கால்வாய் இருந்தது. அதை வேலன், 'அத்தரி பாச்சா' என்று சொல்லி ஒரு தாண்டு தாண்டினான். அப்போது அவன் 'கொழுக்கட்டை' என்பதை மறந்துவிட்டான். 'அத்தரி பாச்சா, அத்தரி பாச்சா' என்று சொல்லிக்கொண்டே தன் வீட்டுக்குப் போனான்.

அங்கே அவன் அவனுடைய பெண்சாதியைப் பார்த்து, 'எனக்கு அத்தரி பாச்சா சுட்டுக்கொடு; என் அக்காள் சுட்டுக்கொடுத்தது நன்றாய் இருந்தது. அந்த மாதிரி சுட்டுக்கொடுக்கவேண்டும்' என்று சொன்னான். அத்தரி பாச்சா என்றால் அவன் பெண்சாதிக்குத் தெரியுமா? ஆதலால் அவள் அஃது என்னவோ என்று பேசாமல் இருந்து விட்டாள். அதனால் வேலனுக்கு அதிகக் கோபம் வந்தது.

'மூடமே! அத்தரி பாச்சா என்றால் உனக்குத் தெரியாதா?' என்று ஒரு கழியால் அவளை நன்றாய் அடித்தான். அப்போது அங்கேயிருந்த அவன் மாமியார், 'அடே பாவி! அத்தரி பாச்சா என்றால் யாருக்குத் தெரியும். என் பெண்ணை இப்படி அடிக்கலாமா? அவள் உடம்பைப் பார்! கொழுக்கட்டைமாதிரி வீங்கிவிட்டதே' என்றாள். கொழுக்கட்டை என்று அவள் சொன்னதும் வேலன், 'மாமி! மாமி! இப்போது நீங்கள் சொன்னீர்களே அது தான். கொழுக்கட்டை! கொழுக்கட்டை! அதுதான் நான் கேட்டது. அதை நான் மறந்துவிட்டேன். அத்தரி பாச்சா என்று தெரியாமல் சொன்னேன்' என்றான்.

அதைக் கேட்ட அவன் பெண்சாதியும், மாமியும் அவன் மூடத்தனத்திற்குப் பரிதாபப்பட்டார்கள். பிறகு

அவர்கள் அவனுக்கு நிறையக் கொழுக்கட்டை சுட்டுக் கொடுத்தார்கள். வேலன் அதைத் தின்று சந்தோஷப் பட்டான்.

மூடர்களுக்குத் தங்கள் குற்றம் தெரியாது; மற்றவர்களைக் கஷ்டப்படுத்துவார்கள்



## 23. மானும் மான்குட்டியும்

மான்குட்டி ஒன்று தன் தாயைப் பார்த்துச் சிரித்தது. அதைப் பார்த்த தாய்மான், 'ஏன் குழந்தாய் சிரிக்கிறாய்?' என்று கேட்டது.



அதற்கு அந்த மான்குட்டி, 'அம்மா! உன் உடம்பு இலேசாய் இருக்கிறது. கால்களும் பலமாயும், நீளமாயும்

இருக்கின்றன. உன்னைப்போல் வேகமாய் ஓட ஒரு மிருகத்தாலும் முடியாது அல்லவா? அதனால் சந்தோஷப்பட்டுச் சிரித்தேன்' என்றது.

அதைக் கேட்ட தாய்மான் தன் குட்டியைப் பார்த்து, 'குழந்தாய்! நீ சொல்வது எல்லாம் சரிதான். ஆனால் எனக்குத் தைரியம் இல்லை. நான் பயங்கொள்ளி. சிறு சத்தம் கேட்டாலும் நடுங்குகிறேன். அப்படிப்பட்ட எனக்கு, உடம்பு எப்படி இருந்தால் என்ன?' என்றது.

தைரியம் இல்லாதவர்களுக்கு எதனாலும்
பிரயோசனம் உண்டாகாது



## 24. குள்ளநரியும் காக்கையும்

ஒரு மரத்தின்மேல் ஒரு காக்கை வாயில் ஒரு வடையை வைத்துக்கொண்டு உட்கார்ந்து இருந்தது. அப்போது அந்த வழியாக ஒரு குள்ளநரி வந்தது. அது மரத்தின் மேல் இருக்கும் காக்கையைக் கண்டு அதன் வாயில் இருக்கும் வடையைத் தான் தின்னவேண்டும் என்று ஆசைப்பட்டது. அது முடியுமா? குள்ளநரியால் காக்கையைப் பிடிக்க முடியாதே! ஆனால் குள்ளநரி ஒரு தந்திரம் செய்தது! அஃது என்ன தெரியுமா?

அது காக்கையைப் பார்த்து, 'காக்கையாரே! காக்கையாரே! நீர் எவ்வளவோ அழகாய் இருக்கிறீர்! உம்மைப்போல் அழகானவர்களை நான் பார்த்ததே இல்லை. தயைசெய்து ஒரு பாட்டுப் பாடும் கேட்போம்' என்றது.

அதைக் கேட்டதும் மூடக்காக்கை, சந்தோஷப் பட்டுக், 'கா, கா' என்று கத்திற்று. அப்போது அதன் வாயில்

இருந்த வடை கீழே விழுந்தது! உடனே குள்ளநரி அதை எடுத்துக்கொண்டு ஓடிப் போயிற்று. மூடக் காக்கை



ஏமாறி, 'ஐயோ புத்தியில்லாமல் கெட்டேனே!' என்று வருத்தப்பட்டது.

மூடர்கள் மோசம் போவார்கள்.



## 25. புத்தி இல்லாத வைத்தியன்

ஒரு காட்டில் புலி ஒன்று இருந்தது. அது கொஞ்சம் நேரங்கூட சும்மா இருக்காது. எல்லா மிருகங்களையும் பிடித்துக் கொல்லுகிறதுதான் அதன்வேலை. திடீர் என்று அந்தப் புலியின் நான்கு கால்களிலும், ஏதோ வியாதியால்,

நோய் உண்டாயிற்று. அதனால் அந்தப் புலிக்கு நடக்கக் கூட முடியவில்லை. அது மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டு இருந்தது.

அப்போது அந்தவழியே ஒரு வைத்தியன் போனான். அவன் கையில் மருந்துப் பெட்டியும் இருந்தது. புலி அவனைப் பார்த்து, 'ஐயா வைத்தியரே! என் கால்களில் நோய் உண்டாயிருக்கிறது. நீர் அதை ஏதாவது கொஞ்சம் மருந்து போட்டுக் குணப்படுத்த வேண்டும். அதனால் உமக்குப் புண்ணியம் உண்டு' என்று கெஞ்சிக் கேட்டது.

அதற்கு அந்த வைத்தியன், 'ஓ புலியே! நீ துஷ்ட மிருகம் ஆயிற்றே! உனக்கு நான் உதவி செய்தால் பிறகு நீ என்னைக் கொன்றுவிடுவாயே!' என்று சொன்னான்.

அதைக் கேட்ட புலி, 'ஐயா நீர் அப்படிச் சொல்ல வேண்டாம். எனக்கு நல்ல குணம் அதிகம் உண்டு. நான் மற்றப் புலிகளைப் போல் துஷ்ட காரியங்கள் செய்ய மாட்டேன். உதவி செய்தவர்களுக்குக் கெடுதல் செய்யக்கூடாது. அப்படிக் கெடுதல் செய்வது பாவம் ஆயிற்றே!' என்று சொல்லிற்று.

வைத்தியன் அந்தப் புலி சொன்ன வார்த்தைகளை உண்மை என்று நம்பினான். அவன் அதன் அருகில் போய் அதன் கால்களுக்கு மருந்து போட்டுக் கட்டினான். பிறகு வீட்டிற்குப் போய்விட்டான். மறு நாளும் அவன் அந்தப் புலிக்கு மருந்து எடுத்துக்கொண்டு போனான்.

அதற்குள் அந்தப் புலிக்குக் கால்களில் இருந்த நோய் போய்விட்டது. அதனால் அதற்கு எப்போதும்போல் நன்றாய் நடக்க முடிந்தது. ஆனால் அந்தத் துஷ்ட மிருகம்

வைத்தியன் செய்த உதவியை மறந்துவிட்டது. அது வைத்தியன் வந்ததும் அவன்மேல் பாய்ந்து அவனைக் கொன்று தின்று விட்டது. பார்த்தீர்களா புலியின் குணத்தை !

துஷ்டர்களுக்கு நன்மை செய்தாலும்
அவர்கள் தீமையையே செய்வார்கள்



## 26. புத்தி உள்ள நாய்

செஞ்சியில் ஒரு வியாபாரி இருந்தான். அவன் ஒரு நாயை வளர்த்து வந்தான். அது மிகவும் அறிவு உள்ளது. அந்த வியாபாரி அந்த நாயை எங்கேபோனாலும் கூடவே அழைத்துக்கொண்டு போவான்.

ஒருநாள் அந்த வியாபாரி பக்கத்து ஊருக்குப் போனான். அங்கு ஒருவன் அவனுக்கு ஆயிரம் ரூபா கொடுக்க வேண்டும். அதை அந்த வியாபாரி வாங்கிக் கொண்டு தன்னுடைய ஊருக்குத் திரும்பினான்.

வழியில் அவனுக்கு அதிகப் பசி உண்டாயிற்று. அவன் கையில் கட்டுசாதம் இருந்தது. அங்கே ஓர் ஆறு ஓடியது. அவன் அந்த ஆற்றங் கரையில் உட்கார்ந்து கட்டுசாதத்தைச் சாப்பிட்டான். நாய்க்கும் வயிறு நிறை யச் சோறு போட்டான். சாப்பிடும்போது அவன் பணப் பையைப் பக்கத்தில் வைத்து இருந்தான்.

சாப்பிட்டு ஆனதும் அவன் ஊருக்குப் போகப் புறப் பட்டான், ஆனால் அவன் பணப் பையை மறந்துவிட்டான். கொஞ்சதூரம் போனதும் அவன் பணப் பையை மறந்து விட்டான் என்று நாய் தெரிந்துகொண்டது.

அதனால், நாய் அந்த வியாபாரிக்கு முன்னால் போய்க் குரைத்து வழி விடாமல் குறுக்கே நின்றது. நாய் அப்படிச் செய்வதின் காரணம் அவனுக்குத் தெரியவில்லை. ஆதலால் அவன் தன் கையில் இருந்த தடியால் நாயை ஓர் அடி அடித்துவிட்டுக் கொஞ்ச தூரம் போனான். மறுபடியும் அந்த நாய் ஓடிப் போய் அவன் துணியைக் கடித்து இழுத்தது.

அதனால் அவன் அந்த நாய்க்குப் பைத்தியம் பிடித்து விட்டது என்று நினைத்தான். சும்மா இருந்தால் அது கடிக்கும் என்று எண்ணி அவன் அதைத் தடியால் நன்றாய் அடித்தான். நாயின் தலையில் இருந்து இரத்தம் வந்தது. அஃது அங்கேயே பேசாமல் இருந்தது. வியா



பாரி போய்விட்டான். நாய் திரும்பி ஆற்றங் கரைக்குப் போயிற்று. பணப் பை அப்படியே இருந்தது. அதை ஒருவரும் பார்க்காதபடி நாய் அதன்மேல் படுத்தது; கொஞ்ச நேரத்தில் செத்துப்போயிற்று.

வியாபாரி வீட்டுக்குப் போனதும் அவனுக்குப் பணப் பையின் நினைவு வந்தது. உடனே அவன் வேகமாய்ஆற்றங்

கரைக்கு ஓடினான். அங்குப் பணப் பையின்மேல் தன்னுடைய நாய் படுத்துச் செத்துக் கிடப்பதைக் கண்டான். பணப் பையை மறந்துவிட்டதனால்தான், நாய், துணியைக் கடித்து இழுத்தது என்று அவன் தெரிந்துகொண்டான். 'இந்த நாய்க்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என்று இதைக் கொன்று விட்டேனே' என்று அழுதான். அழுதால் அந்த நாய் வருமா? பிறகு அவன் பணப் பையை எடுத்துக்கொண்டு வீட்டிற்குப் போனான்.

ஆலோசனை இல்லாமல் எதையும் செய்யக்கூடாது



## 27. எப்போதும் உண்மை பேசு

ஓர் ஊரில் பொன்னுசாமி என்று ஒரு பையன் இருந்தான். அவன் மிகவும் நல்லவன். அவனிடத்தில் அவன் தாயாருக்கு அதிகப் பிரியம் உண்டு. ஒருநாள் அவன் தாயாருக்கு அதிகக் காய்ச்சல் கண்டது. அது வரவர அதிகம் ஆயிற்று. அவள் இறந்துபோவாள் என்று வைத்தியர்கள் சொல்லிவிட்டார்கள். அப்போது பொன்னுசாமி, 'அம்மா, அம்மா! நான் என்ன செய்வேன்' என்று அழுதான். அதைக் கண்ட அவன் தாயார், 'அப்பா! அழாதே! நான் ஒன்று சொல்லுகிறேன் கேள். நான் இறந்துபோவது உண்மை. நீ உயிரோடு இருக்கும் வரையில் பொய்யே பேசாதே! எப்போதும் உண்மை பேசு! அதனால் நீ சுகப்படுவாய்' என்று சொன்னாள். பிறகு அவள் உயிர் போய்விட்டது!

பிறகு கொஞ்ச நாள் ஆயிற்று. பொன்னுசாமி ஒரு வியாபாரி இடத்தில் வேலைக்கு அமர்ந்தான். அங்கே

அவன் நல்லவன் என்று பேர் எடுத்தான். ஒருநாள் அந்த வியாபாரி பொன்னன் இடம் நூறு ரூபாவைக் கொடுத்தார்; அதைப் பக்கத்து ஊரில் இருந்த அவருடைய தம்பி இடம் கொடுத்துவிட்டு வரச் சொன்னார்.

பொன்னன் ரூபாக்களை எடுத்துக்கொண்டு பக்கத்து ஊருக்குப் போனான். வழியில் இருட்டிவிட்டது. அப்போது அந்த வழியே வந்த திருடர்கள் பொன்னுசாமியைப் பிடித்துக் கொண்டார்கள். அவர்கள் அவனைப் பார்த்து, 'அடே! உன் இடத்தில் என்ன இருக்கிறது?' என்று கேட்டார்கள். அதற்குப் பொன்னுசாமி, 'நூறு ரூபாக்கள் இருக்கின்றன' என்று சொன்னான்.

உடனே திருடர்கள் அவனைப் பரிசோதனை செய்தார்கள். அவன் சொன்னதுபோல் அவனிடம் நூறு ரூபாக்கள் இருந்தன. திருடர்கள் ஆச்சரியப்பட்டார்கள். பிறகு திருடர்கள், பொன்னுசாமியைப் பார்த்து, 'நீ உன் இடம் ரூபாக்கள் இருப்பதைப் பயம் இல்லாமல் சொல்லிவிட்டாயே! இப்போது இதை நாங்கள் எடுத்துக்கொண்டால் நீ என்ன செய்வாய்? நீ ஏன் உண்மையைச் சொன்னாய்?' என்று கேட்டார்கள்.

அதற்குப் பொன்னுசாமி, 'ஐயா, எனக்குப் பயம் இல்லாமல் இல்லை. இந்த என் எஜமானன் ரூபாக்கள். என் தாயார் இறந்து போகையில் என்னைப் பார்த்து, 'எப்போதும் உண்மையே பேசு' என்று சொன்னார்கள். அதனால் அவர்கள் கட்டளைப்படியே இப்போது உண்மையைச் சொன்னேன்' என்றான்.

அதைக் கேட்ட திருடர்கள் சந்தோஷப்பட்டார்கள். அவர்கள், 'அப்பா! நீ நல்ல பிள்ளை. உன் தாய் சொல்

லைத் தட்டாமல் நீ நடந்தாய்! உன்னை நாங்கள் ஒன்றும் செய்ய மாட்டோம். கடவுள் உன்னைக் காப்பாற்றுவார். உன் ரூபாக்கள் எங்களுக்கு வேண்டாம். நீயே கொண்டு போ! இந்தா!' என்று ரூபாக்களைக் கொடுத்துவிட்டுப் போனார்கள். தாய் சொல்லைத் தள்ளாத சிறுவனும் சந்தோஷத்தோடு போனான்.

'தாயிற் சிறந்தொரு கோயிலும் இல்லை.'



## 28. நண்டும் கொக்கும்

ஒரு குளத்தின் கரையில் ஒரு கொக்கு விசனப்படுவது போல் உட்கார்ந்து இருந்தது. உண்மையில் அதற்கு ஒரு விசனமும் இல்லை. அதை ஒரு நண்டு பார்த்து, 'ஐயா! கொக்காரே! நீர் ஏன் விசனமாய் இருக்கிறீர்?' என்று கேட்டது.

அதற்கு அந்தக் கொக்கு, 'ஐயா, நண்டாரே! நாளைக்கு இங்குச் செம்படவர்கள் வந்து வலை போட்டு உங்கள் கூட்டத்தாரைப் பிடிக்கப் போகிறார்கள்! அதனால் எனக்கு விசனமாய் இருக்கிறது' என்று சொல்லிற்று.

அந்த வார்த்தைகளைக் கேட்டதும் நண்டுக்குப் பயம் உண்டாயிற்று. அந்தச் சங்கதியை அந்த நண்டு குளத்தில் இருந்த எல்லா மீன்களுக்கும் சொல்லிற்று. அந்த மீன்கள் 'என்ன செய்யலாம்' என்று யோசனை செய்தன.

கடைசியாக அந்த மீன்கள் கொக்கின் இடம் போய், 'ஐயா, கனவானே! எங்களை, செம்படவர்கள் கையில் அகப்படாமல், நீர்தான் காப்பாற்ற வேண்டும்' என்று கெஞ்சின.

கொக்கு, மீன்களைப் பார்த்து, 'நீங்கள் பயப்பட வேண்டாம்; இதோ பக்கத்தில் ஒரு நல்ல குளம் இருக்கிறது. நீங்கள் ஒவ்வொருவராக வந்தால் அந்தக் குளத்தில் உங்களைக் கொண்டுபோய் விடுகிறேன்' என்றது. எல்லா மீன்களும் அதன் வார்த்தையை நம்பி ஒவ்வொன்றாக வந்தன.



கொக்கு, சந்தோஷத்துடன் மீன்களை நடைக்கு ஒன்றாகப் பிடித்துக்கொண்டுபோய்த் தின்றது. மிச்சம் இருந்த மீன்களை ஓர் இடத்தில் சேர்த்து வைத்தது. இதை அறி

யாத நண்டும் கொக்கைப் பார்த்து, 'கொக்காரே! என்னையும் அந்தக் குளத்தில் கொண்டுபோய் விடும்' என்றது. 'நல்லது' என்று கொக்கு அதையும் தூக்கிக்கொண்டு போயிற்று. சிறிது தூரம் போனதும் அங்கே தரையிற் செத்துக்கிடக்கும் மீன்களை நண்டு பார்த்தது. அதற்குக் கொக்கின் தந்திரம் தெரிந்துவிட்டது. அப்போது நண்டு என்ன செய்தது தெரியுமா?

அது கொக்கைப் பார்த்து, 'ஐயா, நான் இருந்த குளத்தில் இன்னும் சில நண்டுகள் இருக்கின்றன. என்னை மறுபடியும் அங்குக் கொண்டுபோனால் நான் அந்த நண்டுகளையும் அழைத்து வருகிறேன்' என்றது.

கொக்கு அதன் வார்த்தையை நம்பி அதை மறுபடியும் அந்தக் குளத்துக்குக் கொண்டுபோயிற்று. அங்கே போனதும் நண்டு தன்னுடைய கொடுக்கினால் கொக்கின் கழுத்தை வெட்டித் தண்ணீரில் விழுந்து சுகமாய் இருந்தது. வஞ்சனை உள்ள கொக்கு செத்துப் போயிற்று.

மோசம் செய்கிறவர்கள் மோசம் போவார்கள்



## 29. மூடனால் வந்த மோசம்

செட்டியார் ஒருவர் தம்முடைய ஊருக்குப் பக்கத்தில் இருந்த ஓர் ஊருக்குப் போகப் புறப்பட்டார். வழியில் ஒரு காடு உண்டு. துணைக்கு அவர் ஒரு பணம் கொடுத்து ஓர் ஆளை அழைத்துக்கொண்டு போனார். அந்த ஆள் ஒன்றும் தெரியாத முழுமூடன்.

செட்டியாரும், முழுமூடனும் வழியில் நிற்காமல் நடந்துகொண்டே இருந்தார்கள். அவர்கள் ஒரு காட்டில்

போகும்போது பொழுது போய்விட்டது. செட்டியார் இடத்தில் ஒரு பை நிறைய ரூபாக்கள் இருந்தன. 'திரு டர்கள் பார்த்தால் ரூபாக்களைப் பிடுங்கிக்கொள்ளுவார் களே' என்று செட்டியார் நினைத்தார். அதனால், 'பொழுது விடிந்ததும் போகலாம்' என்று அவர் ஒரு செடி மறைவில் படுத்துக்கொண்டார். முழுமூடன் எல்லோரும் போகிற வழியில் படுத்துக்கொண்டான். கொஞ்சநேரம் ஆயிற்று. அந்த வழியே திருடர்கள் அநேகர் வந்தார்கள். அவர் களில் ஒருவனுடைய காலில் முழுமூடனுடைய கால் பட் டது. அப்போது அந்தத் திருடன் மற்றவர்களுக்கு முழு மூடனைக் காட்டி, 'இஃது என்ன மரம்போல் இருக்கிறதே' என்று சொன்னான்.

அதைக் கேட்டதும் மூடனுக்குக் கோபம் வந்தது. அதனால் அவன், 'உங்கள் வீட்டு மரம் இடுப்பில் ஒரு பணம் முடிந்து வைத்து இருக்குமோ' என்று சொன்னான். உடனே திருடர்கள் அவனைப் பரிசோதனைசெய்து அவன் இடம் இருந்த ஒரு பணத்தைப் பிடுங்கிக்கொண்டார்கள். அப்போது ஒரு திருடன், 'இந்தப் பணம் செல்லுமோ செல்லாதோ' என்றான்.

உடனே முழுமூடன், 'என் பணம் நல்ல பணம் ஆயிற்றே! சந்தேகம் இருந்தால் இதோ செட்டியார் செடி மறைவில் இருக்கிறார். அவர் இடம் காட்டுங்கள்' என்றான். உடனே திருடர்கள் செட்டியாரைப் பிடித்து அவரிடம் இருந்த ரூபாக்களையும் கொண்டுபோனார்கள். செட்டியார் வருத்தப்பட்டார். 'மூடனால் வந்த மோசம் அல்லவா இது' என்று ஏங்கினார்.

மூடர்களின் துணையால் ஆபத்தே உண்டாகும்



## 30. தாயின் வார்த்தையைக் கேள்

ஒரு பிரபுவின் வீட்டில் நெடுநாளாய் ஒரு பெரிய எலி இருந்தது. அஃது இரவில் வெளியே வந்து தந்திரமாகப் பண்டங்களைத் திருடித் தின்றுவிட்டு வளைக்குள் போய் விடும். கொஞ்ச நாளில் அந்த எலிக்கு ஐந்தாறு குஞ்சுகள் பிறந்தன.



அந்த எலிக்குஞ்சுகள் கொஞ்சம் பெரியவைகளான தும் தாமே வெளியே போய்ப் பண்டங்களைத் திருடித் தின்ன ஆரம்பித்தன. ஒருநாள் தாய்எலி தன் பிள்ளைகளைப் பார்த்து, 'பிள்ளைகளே! நீங்கள் பகலில் வளையில் இருந்து வெளியே போகக்கூடாது. இராத்திரியில் மெதுவாகப்போய்க் கிடைத்ததைத் தின்றுவிட்டு, வளைக்குள் வந்து சேருங்கள். நான் சொன்னபடி செய்யாவிட்டால் பூனை உங்களைப் பிடித்துக்கொள்ளும்' என்று சொல்லிற்று.

அதன் வார்த்தைகளை எல்லாக் குஞ்சுகளும் கேட்டு அதன்படி நடந்தன. ஆனால் ஒரு குஞ்சுமட்டும், 'நம்முடைய தாய் பயங்கொள்ளி. அவளுக்கு ஒன்றும் தெரியாது. நாம் பகலில் பசியோடு இருக்க முடியுமா' என்று எண்ணிற்று. எண்ணி, ஒருநாள் அது பகலிலேயே சென்று பண்டங்களைப் பயம் இல்லாமல் திருடித் தின்றது. அப்போது அங்கே வந்த ஒரு பூனை அதைப் பிடித்துக் கொண்டது. தாயின் பேச்சைக் கேளாத எலி பூனை இடம் அகப்பட்டுச் செத்துப் போயிற்று.

'தாய்சொற் றுறந்தால் வாசகம் இல்லை'



## 31. ஆறுவது சினம்

காளமேகப் புலவர் என்று ஒரு பெரியவர் இருந்தார். அவர் நினைத்த மாத்திரத்தில் எந்த விதப் பாட்டுக்களையும் பாடுவார். முன்காலத்தில் இருந்த புலவர் சிலர் சுவாமியின் தயையைப்பெற்றவர்களாய் இருந்தார்கள். அவர்கள் எதையும் செய்ய வல்லமை உடையவர்கள். அப்படிப்பட்ட பெரிய புலவர்களில் காளமேகம் என்பவரும் ஒருவர். காளமேகம் பார்வைக்கு அவ்வளவு அழகானவர் அல்லர்.

ஒரு நாள் அவர் ஒரு தெருவழியே போனார். அப்போது தெருவில் ஒரு குழந்தை விளையாடிக் கொண்டு இருந்தது. அந்தக் குழந்தை காளமேகப் புலவரைக் கண்டு பயந்து அழுதுகொண்டே பக்கத்தில் நின்ற தன் தாயின் இடம் ஓடிற்று. அந்தக் குழந்தையின் தாயார் கோபக்காரி. அவள் தன் குழந்தை அழுதுகொண்டு ஓடி-

வந்ததற்குக் காரணம் தெரிந்துகொண்டாள். அப்பொழுதே அவள் காளமேகத்தைப் பார்த்து, 'உன்னைக் கொடுப்பேனே மூதேவி' என்று சொல்லி, தன் இஷ்டம் போல் அவரை வைதாள்.

சரியான காரணம் இல்லாமல் அவள் தன்னை வைததைக் கேட்டவுடன் அவருக்குக் கோபம் உண்டாயிற்று. அதனால் அவர் ஒன்றையும் ஆலோசியாமல், அவளுடைய குழந்தை செத்துப் போகும்படி ஒரு பாட்டுப் பாடினார். அப்பொழுதே அந்தக் குழந்தை கீழே விழுந்து செத்துப் போயிற்று. அப்போதுதான் அங்கே இருந்தவர்களுக்கு அவர் காளமேகப் புலவர் என்று தெரிந்தது. அதனால் அந்தக் குழந்தையின் தாய்க்கு அதிக பயம் உண்டாயிற்று.

இந்தச் சமாசாரம் அவளுடைய புருஷனுக்குத் தெரிந்தது. அவன் ஓடிப் போய்க் காளமேகப் புலவருடைய காலில் விழுந்து, 'ஐயா, மன்னிக்க வேண்டும். என் மனைவி ஒன்றும் தெரியாதவள்; முன் கோபக்காரி. ஏழையை மன்னித்து என் குழந்தையைப் பிழைக்கச் செய்யவேண்டும்' என்று அழுது வேண்டிக் கொண்டான்.

அதனால் காளமேகப் புலவருக்குக் கோபம் குறைந்தது. பிறகு அவர், 'நாம் என்ன காரியம் செய்துவிட்டோம். அந்தப் பெண்பிள்ளை நமக்கு ஈடா! அவள் மேல் கோபித்துக்கொண்டு ஒரு குழந்தையைச் செத்துப் போகச் செய்தோமே' என்று வருத்தப்பட்டார். பிறகு அவர் இறந்துபோன குழந்தையை எழுப்பிக் கொடுத்துவிட்டுப் போனார்.

அன்று முதல் அந்தக் குழந்தையின் தாயார் தனக்கு இருந்த முன்கோபத்தை ஒழித்துவிட்டு நல்ல குணம் உடையவளானாள்.

கோபம் குடியைக் கெடுக்கும்.



## 32. கர்வம் கூடாது

முன் காலத்தில் தஞ்சாவூரில் ஓர் அரசர் இருந்தார். அவருடைய சபையில் சங்கர பண்டிதன் என்னும் பெயர் உள்ள ஒருவன் இருந்தான். அவன் நன்றாய்ப் படித்தவன். அதனால் அவன் மிகவும் கர்வம் அடைந்தான்.

படித்தவர்கள் யாராவது அரசனைப் பார்க்க வந்தால், சங்கரபண்டிதன் அவர்களை ஏதாவது கேள்வி கேட்டு மருட்டி அனுப்பி விடுவான். அதனால் படித்தவர்கள் அவனைத் தூஷித்தார்கள்; அவர்கள் அவனை எப்படியாவது அடக்க வேண்டுமென்று நினைத்தார்கள்.

இந்த விஷயம் தஞ்சாவூரிலேயே இருந்த கருணாநிதி என்னும் ஒரு சிறுவனுக்குத் தெரிந்தது. அவன் நன்றாய்ப் படித்தவன். உடனே அந்தச் சிறுவன், 'நான் போய்ச் சங்கரபண்டிதரை அடக்குகிறேன்' என்று இராஜாவின் சபைக்குப் போனான். தான் வந்த விஷயத்தை இராஜாவுக்கும், சங்கரபண்டிதனுக்கும் சொன்னான். இராஜா ஆச்சரியப்பட்டார். சங்கரபண்டிதனுக்குக் கோபம் வந்தது. இராஜாவின் சபையில் இருந்தவர்கள் எப்படி ஆகுமோ என்று நினைத்தார்கள்.

சங்கரபண்டிதன் சிறுவனை அநேகம் கேள்விகளைக் கேட்டான். அவைகளுக்குச் சிறுவனாகிய கருணாநிதி

சரியாகப் பதில் சொன்னான். பிறகு, கருணாநிதி சங்கர பண்டிதனைப் பார்த்து, 'ஐயா, மழை யாருக்காகப் பெய்



கிறது?' இந்தக் கேள்விக்கு நீர் பதில் சொல்லும்' என்றான்

அதற்குச் சங்கர பண்டிதன், 'மழை மனிதர்களுக்காகப் பெய்கிறது; மழை பயிர்கள் விளைவதற்காகப் பெய்கிறது' என்று பலவிதமாகச் சொன்னான். ஒன்றும் சரியாய் இல்லை.

கடைசியாகச் சிறுவன், 'மழை நல்ல மனிதர்களுக்காகப் பெய்கிறது' என்று சொன்னான். அதைக் கேட்டதும் அரசர், 'சிறுவன் சொன்னதே சரி' என்று ஒப்புக்கொண்டார். அதுமுதல் சங்கரபண்டிதனை நீக்கிவிட்டுக் கருணாநிதியை அரசர் தன்னிடத்தில் வைத்துக்கொண்டார். வித்தியா கர்வம்கொண்ட சங்கரபண்டிதன் எப்படி ஆனான் பார்த்தீர்களா?

'எப்போதும் கர்வம் கூடாது'



## 33. அதிசயமான குணம்

வடக்கே ஓர் ஊரில் ஒரு சுவாமியார் இருந்தார். அவர் நன்றாய்ப் படித்தவர். நல்ல குணம் உடையவர். பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் அநேகர் அவரிடம் போவது வழக்கம். அவர்களுக்கு அந்தச் சுவாமியார் நல்ல விஷயங்களைச் சொல்லிக்கொடுப்பார்.

அந்த ஊரில் கோபாலன் என்னும் சிறுவன் ஒருவன் இருந்தான். அவன் மிகவும் நல்ல பையன். மிகவும் புத்திசாலி. அவன் ஒவ்வொரு நாளும் சுவாமியாரிடம் போவான்; ஏதாவது நல்ல விஷயங்களைக் கேட்டுக்கொண்டு வருவான்.

ஒருநாள் கோபாலன் தன்னுடைய வீட்டில் இருந்து சுவாமியாரைப் பார்த்து வரப் போனான். அப்போது

எதிரே ஒரு பையன் வந்தான். அவன் பெயர் கோவிந்தன். கோபாலனுக்குக் கோவிந்தனைத் தெரியும். கோவிந்தன் சமீபத்தில் வந்ததும் கோபாலனைப் பார்த்து, 'எங்கே போகிறாய் கோபாலா?' என்று கேட்டான்.

அதற்குக் கோபாலன், 'இஃது உனக்குத் தெரியாதா! அந்தச் சுவாமியாரிடந்தான் போகிறேன்' என்று சொன்னான். அதைக் கேட்டதும் கோவிந்தன், 'கோபாலா! அஃதென்ன! நீ ஒவ்வொரு நாளும் தவறாமல் சுவாமியாரிடம் போகிறாயே! அவரிடம் என்ன அதிசயமான குணம் இருக்கிறது? அவர் இரும்பைப் பொன் ஆக்குவாரா? கல்லைக் கற்கண்டாகச் செய்வாரா?' என்று கேட்டான்.

உடனே கோபாலன், 'அப்படி எல்லாம் அவர் ஒன்றும் செய்யமாட்டார். அவரிடத்தில் ஒரே ஓர் அதிசயமான குணம் இருக்கிறது. அதற்காகத்தான் நான் அவரிடம் போய்க்கொண்டு இருக்கிறேன்' என்றான். அதற்குக் கோவிந்தன், 'ஆ, அப்படியா! என்ன அது? அந்த அதிசயமான குணத்தைச் சொல் கேட்போம்' என்றான்.

அதைக் கேட்டதும் கோபாலன், 'அதிசயமான குணமா! அந்தச் சுவாமியாருக்குக் கொஞ்சங்கூடக்கோபம் என்பதே கிடையாது! இஃது அதிசயமான குணம் அல்லவா? அந்தக் குணம் உனக்கு வரவேண்டும் என்றுதான் நான். அந்தச் சுவாமியார் இடம் போகின்றேன். கோபம் இல்லாமல் இருக்கப் பழகுவது நல்லது அல்லவா? "ஆறுவது சினம்" என்று ஆத்திசூடியில் எழுதி இருக்கிறதே. அதை நீ பார்த்தது இல்லையா!' என்று சொன்னான்.

அதைக் கேட்டதும் கோவிந்தன் வெட்கப்பட்டு ஒன்றும் சொல்லாமல் போய்விட்டான். கோபாலனும் சாமியாரிடம் போனான்.

'கோபம் இல்லாத குருவே எல்லோரிலும் பெரியவர்'



## 34. மன்னிப்பின் மகிமை

ஒரு காட்டில் ஒரு சிங்கம் மரத்தின் நிழலில் படுத்துத் தூங்கிக்கொண்டு இருந்தது. அப்போது அங்கே அநேகம் சுண்டெலிகள், அங்கும் இங்கும் ஓடி விளையாடிக்கொண்டு இருந்தன.




அப்போது ஒரு சுண்டெலி, தூங்கிக்கொண்டு இருந்த சிங்கத்தின் முகத்தில் குதித்து ஏறி உட்கார்ந்தது. அதனால் சிங்கம் திடுக்கிட்டு எழுந்து, அந்தச் சுண்டெலியைக் கொல்லப் போயிற்று. அதைக் கண்ட சுண்டெலி பயந்து